உ

கடவுள் துணை

# பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

இஃது

மைசூர் சமஸ்தானத்தில் சோதிடம், வைத்தியம்
இவ்விரண்டில் தேர்ந்தவரான ம-ா-ா-ஸ்ரீ
வீரோஜிராவ் அவர்கள் கையாண்டு வந்த
முறைகளைக் கேட்டுவாங்கி,

செஞ்சி

ஏகாம்பர முதலியார் அவர்களால்

எழுதி முடிவுபெற்றது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,
திருமகள் விலாச அச்சு நிலையம்,
சென்னை.

பதிப்புரிமை] 1953. [விலை ரூபா 1-8-0

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

## (முதற் பாகம்)

---

### நாடியறியும் வகை

விநாயகர் துதி

விருத்தம்

வைத்தியதிறவுகோலாய் வரைந்தவீரார்பாகத்தில்
எய்தியமுதற்பாகத்தை யெழில்புவியோர்கள்கண்டு
கைதனில்நாடிப்பார்க்குங் காரணமறியநன்றாய்ச்
செய்திடதமிழ்க்குவோங்குஞ் செயகரிமுகவன்காப்பு.

### முகவுரை விருத்தம்

மண்ணுலகின்மானிடர்கள் வாழவேண்டி
மகிமைபெருமகஸ்தியர்காக் கேயரோடு
புண்ணியர்புலிப்பாணி புலத்தியர்போகர்
புஜண்டரொடுசட்டமுனி பிரமதேவர்
தன்மையுள்ளகாளாங்கி கருவூரர்பவந்தர்
தன்வந்திரிசலசமுனி போகர்மச்சர்
வண்ணமையாம்பிரமரிஷி கருணானந்தர்
வாதிமுதலிவரெண்பேர் சித்தராமே.

சித்தரென்றிவர்கள்செய்த கிரந்தங்கேளு
ஜெயமாகக்காண்பதற்கு லக்ஷங்கோடி
அத்தனையுந்தேடியே கைமுறையாய்க்கண்ட
அளவறிந்தபண்டிதரை யடுத்துவாங்கி
சித்தமாய்வைத்தியத் திறவுகோலில்
செப்பினேன்நாடிகுறி முதற்பாகத்தில்
யெத்திசையுஞ்செஞ்சிகவி விளங்கவேண்டி
யோகாம்பரமின்னூலை வெளியிட்டேனே.

## நூன்முக விருத்தம்

### நாடியறியும் வகை

கரிமுகனடியனை கருத்தில்வைத்து
  கையதனில் நாடியது பார்க்கும்போது
பெருவிரலின்விடைவிட்டு நடுவேதொட்டு
  புகழாகமூன்றுவிர லூணிப்பார்க்கில்
ஒருவிரல்தானோடிட்டால் வாதமாகும்
  உத்தமனேரெண்டோடில் பித்தமாகும்
திருவென்றமூன்றுவிரல் வோடில்சிலேத்மம்
  திகைக்காமலறிந்துபிணி தெரிந்துசொல்லே.

(இதன் பொருள்.) *விநாயகக் கடவுளை வாழ்த்தி துதி செய்து வைத்தியரானவர்கள் நாடிப் பார்க்கும்போது, ஆடவருக்கெல்லாம் வலதுகையைப் பிடித்து பெருவிரலின் மணிக் கட்டினிடமாகப் பார்க்கையில் மூன்றுவிரலை நாடியின்மேல் ஊண அதிலொருவிரல் ஓடுமாகில் வாதமென்று அறியவும், இரண்டு விரலோடுமாகில் பித்தமென்றுஞ் சொல்லவும், மூன்று விரலோடுமாகில் சிலேத்மமென்று தெரியவும், என்றவாறு.*

அங்கையெனுங்கையுருவி நெட்டைவாங்கி
  அடவுடனேமேல்தூக்கி யப்பால்கேளு
செங்கையெனுமுன்கையால் பிடித்துமப்போ
  சீராகநாடியது பார்க்கில்கேளும்
முன்கையில்பறந்துமே நாடிதானும்
  மெள்ளெனவேதானடந்து வோடுமாகில்
தங்கியதுவாதமென்று நீயறிந்து
  தைரியமாய்மருந்தீய்ந்துப் பிணியைநீக்கே.

(இ - ள்.) *கையைப் பிடித்து நாடிப் பார்க்கில் நாம் ஊன்றிய மூன்று விரலில் முதல் விரலானதில் தட்டிய நாடியானது பறந்து மெள்ள வோடுமாகில் வாதமென்று அறிந்து கொள்வீர்கள், எ-று.*

உத்திரியாம்நாடியது நொந்துதானும்
  உயர்ந்துமேபதறியது வோடுமாகில்
பித்தமாம்நாடியது யென்றுநீயும்
  பிசகில்லையனைவோர்க்கு மறிந்துச்சொல்லு

மெத்தவேமேல்கீழாய் பின்டொதுங்கி
மேவியேவிரகெனவே தெரிக்குமாகில்
சுத்தமிதுசிலேத்மமென்று அறிந்துயேயும்
சூக்ஷமுடன்மருந்தீந்துப் பிணியைநீக்கே

(இ - ள்.) உத்திரி நாடியானது நொங்காப்போல் பதறி யோடுமாகில் பித்தமென்று அறியவும். நாடியானது பிரண்டு ஒதுங்கி தெரிக்கு மாகில் சிலேத்தும மென்று அறிவீர்கள், எ - று.

நோயில்லாமனிதருக்கு நாடியோடும்
ஹட்டமதைசொல்லுவேன் அறியக்கேளு
துய்யவனேகாலையிலே வாதமோடும்
துலங்கவேகடும்பகலில் பித்தமாகும்
ஐயமதுமாலையிலே வோடுமென்று
அடவாகவைத்தியர்க ளறிந்துநன்றாய்
கைமுறையாம்வைத்திய திறவுகோலே
கண்ணாடிபோல்பார்த்து களித்துகூறே.

(இ - ள்.) நோயில்லாதவர்களுக்கெல்லாம் நாடியானது எவ்விதம் ஓடுமாகில் காலையில் வாதநாடியோடும், பகலில் பித்த நாடியோடும், மாலையில் ஐயமென்ற நாடியானதுஓடும் இவ்வித மாக வைத்தியர்கள் இன்னும் மற்றவர்களும் அறிந்து கொள் வீர்கள்; ஐயமென்பது சிலேத்துமம், எ - று.

நாடியின் குறி

தெளிந்தவரின்கைக்குள்ளே நாடிதானும்
தான்குளிர்ந்துவெள்ளரிக்கா யானால்வாதம்
அறிந்திடுவாரயரையோடு மின்னங்கேளு
அப்பனேமேனியோடு சென்னில்பித்தம்
பரிந்துமேயறிந்துமொரு வாய்புளித்தால்
பரிட்சையுடன்சிலேற்பனமே யென்றுசொல்லும்
நிரையானவைத்திய திறவுகோலே
நேர்முகமாய்க்கண்டவர்க்குப் பழிநாடாதே.

(இ - ள்.) நாடி யறியவேண்டில் ஒருவர் கைகளைப் பற்றி பார்க்கும்போது வெள்ளரிக்காய் தின்றால் எவ்வளவு குளிர்ச் சியோ அவ்வளவு குளிர்ந்து ஓடுமானால் வாதமாகும்; மேனியும்

அரையிலும் சென்னியிலும் பித்தமாகும்; வாயில் புளிப்பு தோன்றில் சிலேற்பன மென்று அறியவும், எ - று.

பாரப்பாசிலேற்பனமே யுதித்தபோது
பத்தியேநாவுகளில் யினிப்புதோன்றுங்
கூறப்பாநாவிலெட்டிக் கசப்பேயானால்
குடிகொண்டபித்தமதைக் குறித்துச்சொல்லு
நேரப்பாபுளிப்பதுவே தோற்றுமாகில்
நாடியற்றுவாதமென்று நன்றாய்ச்சொல்லு
சீரப்பாயிவையெல்லா மறிந்துநன்றாய்
ஜெகமதனில்சொல்லிமன மகிழுவாயே.

(இ - ள்.) சிலேற்பன நாடியானது உதித்தபோது நாவில் இனிப்பு தோன்றும்; பித்தநாடி யுதித்தபோது கசப்புத் தோன்றும்; வாதநாடி யுதிக்குமாகில் புளிப்புத் தோன்றும்; இவ்வகையாக அறியவேண்டும், எ - று.

செப்புமனந்தன்னில்வாதந் தியதுசாதுபித்தம்
அற்பெனவித்துஜீவ னதினெழுஜடலந்தன்னில்
ஒற்பலநீலமோர்த்தும் உடலொக்குறிப்பதாகும்
நெற்புறயிதனையெல்லாம் நீயுறயறிவார்தாமே.

(இ - ள்.) வாதத்தினால் சூடுவுண்டாகி காது மத்திமமாகும்; விந்தென்னும் வித்துவினால் உற்பத்தியாகிய ஜடலத்தில் நீர் போர்த்துக்கொண்டு நீலம்போல் திரேகம் தோன்றும் அறிவீர்கள், எ - று.

## மாதத்திற்குரிய நாடி குறிப்பு

சித்திரையும்வைகாசி மாதந்தன்னில்
செழுங்கதிரோனுதயத்தில் பார்க்கவேண்டும்
அர்த்தமாம்ஆடியோ டர்ப்பிசிக்கும்
அரையுமொருகார்த்திகைக்கு மத்தியானமாகும்
பத்தியேமார்கழியுந் தையுமாசி
பானுமேல்திரைமறைந்த நேரம்பாரு
இத்யாதிருக்ஷமுடன் நாடிப்பார்த்து
இயம்பிட்டால்பண்டிதற்கு பழியேதட்டா.

(இ - ள்.) வைத்தியரோடு இன்னாம் எவர்களா யிருந்த போதிலும் நாடி பார்க்கவேண்டில் சித்திரை, வைகாசி மாதங்

களில் காலையில் சூரியன் உதயத்திற்கு நாடி பார்க்கவேண்டும். ஆடி, அர்ப்பசி, கார்த்திகைக்கு மத்தியானம் சூரியன் உச்சியில் நிற்கும்போது பார்க்கவேண்டும். மார்கழி, தை, மாசி மாதங்களில் சூரியன் அஸ்தமாகும் தருணத்தில் பார்க்க வேண்டும், எ - று.

தானுனைபங்குனிக்கு மாவணிக்கும்
　தான்கேளுபுரட்டாசி யிவைமூன் றுக்குந்
நேனுகமர்த்தராத் திரியிற்பார்க்கத்
　தெளிவாகநாடியது மூன் றுந்தோன் றும்
பானுகயிவைகளை யு மறிந்துநன்றாய்ப்
　பார்தனிலேவைத்தியங்கள் செய்வாராகில்
கோனென்றேஅகிலமுதற் வணங்கியேற்றி
　குருவென்றேயுன்னடியை தொழுகுவாரே.

(இ - ள்.) பங்குனி, ஆவணி, புரட்டாசி இந்த மூன்று மாதங்களுக்கும் நாடி பார்க்கவேண்டில் அர்த்தராத்திரியில் பார்க்கவேண்டும். இம்முறையாகப் பார்ப்பாராகில் மூன்று நாடியும் தெளிவாகக் கொள்ளும், எ - று.

## நாடி நிற்கும் குறி

கேளப்பாமானிடராய்ப் பிறந்தபேர்க்கு
　களிறுமொருசென் னிநாபி யுந்தியென்னும்
தாளப்பாயிவைமூன் று யிடங்கள்தன்னில்
　தங்கியிருக்கும்வியாதிகளை தானேகேளும்
வாளப்பாசென்னியின்கீழ் வாதமாகும்
　வரையுமொருவுந்தியின்கீழ் பித்தமாகும்
நாளப்பாநாபியின்கீழ் சிலேர்ப்பமாகும்
　நன்றாகயறிந்துபிணி நாடாதோட்டே.

(இ - ள்.) மானிடரானவர்களுக் கெல்லாம் வாதம் பித்தம் சிலேர்ப்பம் தங்குமிடம் யாதெனில் சென்னியில் வுள்ளது வாதம், உந்தியின் கீழ்வுள்ளது பித்தம், நாபியில் உள்ளது சிலேர்ப்பமென்று தெரிந்துக் கொள்ளவும், எ - று.

## வாதநாடியின் குறி

தந்திரிபோல்இம்மூன் றுந் தானங்கண்டு
　தான்கேளுயுந்தியில்வாழ் வாதநாடி

கொந்துசேர்குயிலன்னங் கொக்கோடின்னம்
கூடியேமயிலோணுன் போல்நடந்தால்
விந்தையாம்வாதநாடி யென்றறிந்து
வினையகலஅவிழ்தமுறை கண்டுதேறி
தொந்தமாம்வைத்திய திறவுகோலை
துணையென்றுநம்பிமனந் துணிவுகொள்ளே.

(இ - ள்.) மேற்கூறிய ஸ்தானங்கள் மூன்றையும் அறிந்துக்கொண்டு உந்தியின் வாதநாடி நடப்பது யெவ்விதமென்றால் குயில் அன்னம் கொக்கு மயில் ஓணுன் இவைகளைப்போல் நடக்குமாகில் வாதமென்று அறிவீர்கள், எ - று.

தாக்கியபித்தநாடி தான்செயுங்குறிக்குணங்கள்
வீக்குவார்மூலைபட்டை யாமைபோல்நடக்குமென்பார்
ஊக்கமாம்சிலேற்பநாடி யுகந்திடும்தவளைப்பாம்பு
போக்கொருநடையதாகு மென்றுநீரறிகுவீரே.

(இ - ள்.) பித்தநாடி நடை யறிவது யெவ்விதமென்றால் அட்டை ஆமை இவைகளைப்போல் நடக்கும், சிலேர்ப்பனநாடி நடப்பது எவ்விதமென்றால் தவளை பாம்புபோலாம். இவ்விதமாக அறிவீர்கள், எ - று.

வாழிசேர்மானேரெண்டு வாதமும்பித்தமொன்றுங்
கோழனடக்கும்வண்மை கொடுஞ்சுமைதலைமேற்கொண்டு
நாழுறநடப்போனுக நடுவெனச்சலியாதோடும்
மூவுறுபித்தம்ரெண்டு மொழியக்கேள்சிலேத்மமொன்றே

(இ - ள்.) வாதம் இரண்டும் பித்தம் ஒன்றும் கூடிய நாடியானது நடப்பது யெவ்விதமென்றால் தலையின்மீது பெரும் பாரம் தூக்கிக்கொண்டு நடப்பவன்போல் நடக்கும். அந்த நாடியானது நடுவில் தானே யோடுமாகில் பித்தம் இரண்டும் வாதம் ஒன்று யென்றறியவும், எ - று.

வடுவிழிமானேபிள்ளைக் கண்வளர்கொட்டிபோல
அடுவுவசத்தல்போலா மாறுசேர்ப்பனமிரண்டும்
இடருருவாதமொன்று யெழும்பிடிலதனைப்பார்க்கும்
கடுகியபுணர்ச்சிப்போல நடப்பதுங்கண்டுகொள்ளே.

(இ - ள்.) சிலேர்ப்பனநாடி நடப்பது யெவ்விதமென்றால் பிள்ளைகளின் கண்கள் சுழல்வதுபோலவும் கோணலாகியும் அசைவுற்று நடக்குமாகில் சிலேர்ப்பன மென்று அறியவும்

கொந்துசேர்குயிலன்னங் கொக்கோடின்னாம்
கூடியேமயிலோணுன் போல்நடந்தால்
விந்தையாம்வாதநாடி யென்றறிந்து
வினையகலஅவிழ்தமுறை கண்டுதேறி
தொந்தமாம்வைத்திய திறவுகோலை
துணையென்றுநம்பிமனந் துணிவுகொள்ளே.

(இ - ள்.) மேற்கூறிய ஸ்தானங்கள் மூன்றையும் அறிந்துக்கொண்டு உந்தியின் வாதநாடி நடப்பது யெவ்விதமென்றால் குயில் அன்னம் கொக்கு மயில் ஓணுன் இவைகளைப்போல் நடக்குமாகில் வாதமென்று அறிவீர்கள், எ - று.

தாக்கியபித்தநாடி தான்செயுங்குறிக்குணங்கள்
வீக்குவார்மூலைபட்டை யாமைபோல்நடக்குமென்பார்
ஊக்கமாம்சிலேற்பநாடி யுகந்திடும்தவளைப்பாம்பு
போக்கொருநடையதாகு மென்றுநீரறிகுவீரே.

(இ - ள்.) பித்தநாடி நடை யறிவது யெவ்விதமென்றால் அட்டை ஆமை இவைகளைப்போல் நடக்கும், சிலேர்ப்பனநாடி நடப்பது எவ்விதமென்றால் தவளை பாம்புபோலாம். இவ்விதமாக அறிவீர்கள், எ - று.

வாழிசேர்மானேரெண்டு வாதமும்பித்தமொன்றுங்
கோழனடக்கும்வண்மை கொடுஞ்சுமைதலைமேற்கொண்டு
நாழுறநடப்போனுக நடுவெனச்சலியாதோடும்
மூவுறுபித்தம்ரெண்டு மொழியக்கேள்சிலேத்மமொன்றே

(இ - ள்.) வாதம் இரண்டும் பித்தம் ஒன்றும் கூடிய நாடியானது நடப்பது யெவ்விதமென்றால் தலையின்மீது பெரும் பாரம் தூக்கிக்கொண்டு நடப்பவன்போல் நடக்கும். அந்த நாடியானது நடுவில் தானே யோடுமாகில் பித்தம் இரண்டும் வாதம் ஒன்று யென்றறியவும், எ - று.

வடுவிழிமானேபிள்ளைக் கண்வளர்கொட்டிபோல
அடுவுவசத்தல்போலா மாறுசேர்ப்பனமிரண்டும்
இடருருவாதமொன்று யெழும்பிடிலதனைப்பார்க்கும்
கடுகியபுணர்ச்சிப்போல நடப்பதுங்கண்டுகொள்ளே.

(இ - ள்.) சிலேர்ப்பனநாடி நடப்பது யெவ்விதமென்றா பிள்ளைகளின் கண்கள் சுழல்வதுபோலவும் கோணலாகியு அசைவுற்று நடக்குமாகில் சிலேர்ப்பன மென்று அறியவும்

(இ - ள்.) வாதமானது செய்யுங்குணம் எவ்விதமென்றால் வயிறு மந்தமாகும். அத்துடன் நீர்தாரைவழியி னிடமாக நோயுண்டாகி இந்திரியம் நாசமாகும், சிறுநீர் ஒழுக்குண்டாம், மலமானது கரிகிவிழும், வாதத்தின் குணம், எ - று.

## பித்தஞ் செய்குறி

எல்லவர்க்குமுலாபித்தம் செய்குறியியம்பக்கேளாய்
சொல்லவேவிழிசுழண்டு குளிர்ந்திருண் டிருக்குமல்லால்
சில்லநீர்கடுத் துநொந்து சிறுகெனவிழுந்துபின் னும்
அல்லவேயறியச்சொன்னோம் நவின்றிடுமுண்மைதானே.

(இ - ள்.) பித்தமானது செய்குறி எவ்விதமென்றால் கண் விழியானது சுழலும். இருண்டிருக்கும் சிறு நீரானது கடுத்து நொந்துவிழும், இவ்வித வியாதி பித்தமென் றறியவும், எ-று.

## சிலேர்ப்பனஞ் செய்குறி

சேர்த்துடல்செய்குணங்கள் சில்லெனவுடம்புவேர்க்கும்
ஏத்தமாயுமிழ்நீர்தானும் யினித்தது நாவெளுக்கும்
நாத்தநீரழிந்துவீழும் நயம்பெறமெளுக்குமேனி
தோத்துமிக்குணங்கள்கண்டால் சிலேர்ப்பனத்தொகுதியாமே.

(இ - ள்.) சிலேர்ப்பனஞ் செய்குறி எவ்விதமென்றால் சில்லென்றதாக உடம்பு வேர்க்கும் வாயில் உண்டாகும் உமிழ் நீரானது இனிப்புண்டாகி நாவானது வெளுத்திருக்கும், நீரானது நாற்ற முண்டாகும், மேனியானது வெளுக்கும் சிலேர்ப் பனக்குறி, எ - று.

## வியாதியறியுங் குறி

அந்தவாதங்கள்ரெண்டும் அடுத்திடும்பித்தமொன்று
தொந்தித்துநடக்குமாகில் தோன்றிடுங்குணத்தைக்கேளாய்
வந்துநொந்தூரம்விம்மி மதர்த்திடும்மாதரோகம்
சிந்தனைமிகவுண்டாகி தின்றது செறியாதென்றார்.

(இ - ள்.) வாதம் இரண்டும் பித்தம் ஒன்றும் கூடி நடக்கு மாகில் வயிறானது நொந்து கடுத்து தின்பது ஒன்றும் ஜீரணி யாது, எ - று.

செய்யதோர்பித்தம்ரெண்டு சிலேற்றுமமெழுந்ததாகில்
ஐயதோர்பசியுமில்லை யடிக்கடியுதிரம்வீழும்

துய்யதோர்நயனநீரும் சுத்தமேமஞ்சள்போலாம்
பேய்கள்போல்பித்தல்பேசல் பினத்தசேத்பனங்களாமே.

(இ - ள்.) பித்தம் இரண்டும் அத்துடன் சிலேத்துமம் எழுந்ததாகில் பசிவேளையிராது. அடிக்கடி ஆசனத்தின் வழியாக ரத்தம்விழும், சிறுநீரானது மஞ்சள் போலிருக்கும், பித்தலும் பினத்தலுமுண்டாகும், சிலேர்ப்பனத்தின் குணம், எ - று.

ஒட்டியசிலேர்ப்பம்ரெண்டில் வாதமும்வொன்றுகூடில்
வெப்புருகனல்மேலிட்டு யினிப்பையும்பிகவேவென்று
தப்பிலாபசியுமுண்டாந் தவனமேயத்திரிற்கும்
இப்படிகுணமேகண்டால் சிலேர்ப்பனவாதமென்னே.

(இ - ள்.) சிலேர்ப்பனம் இரண்டும் வாதம் ஒன்றும் கூடில் திரேகத்தில் சூடானது அதிகரித்து இனிப்பான உணவின் மேல் அபேட்சையாகயிருக்கும், பசியதிகமுண்டாகி ஜலத்தின் மேல் அதிக தாகமுண்டாகும், இவ்வித வியாதியை நாடியால் அறியவும், எ - று.

எண்ணியபித்தம்ரெண்டு வாதமொன்றெழுந்ததாகில்
புண்ணெனவுடம்புநோவாம் புகைந்தெனவெரிக்குநெஞ்சில்
திண்ணமாய்நாவுலர்ந்து சுருத்துநீர்கடுத்துவீழும்
அண்ணவருரைத்தவுண்மை ஆயுருவேதமாமே.

(இ - ள்.) பித்தம் இரண்டும் வாதம் ஒன்றும் கூடியெழும் பிடில் மெய்யில் நோவுண்டாகும், நெஞ்சானது புகைந்து புகைந்து யெரிச்சலுண்டாகும், நாவானது வரளும் சிறுநீரானது கடுத்து விழும், வாத சிலேர்ப்பனமாகில், எ-று.

தாங்கியசிலேர்ப்பம்ரெண்டும் தனிப்பித்தமெழுந்ததாகில்
ஓங்கியஜன்னியுண்டாம் உச்சிநோய்செவிகேளாது
பாங்குடநாபிநொந்து பத்தியஞ்செரியாதாகும்
பூங்கொடிபித்தஞ்சிலேர்ப்பமென்றுதான்புகழுவீரே.

(இ - ள்.) சிலேர்ப்பனம் இரண்டும் அதில் பித்தம் தனித்தெழுந்ததாகில் ஜன்னியுண்டாகி உச்சியானது நோகும், செவியானது கேளாது, நாபியானது நொந்து பத்தியம் செரியாது பித்தசிலேர்ப்பமாகல், எ - று.

நாடியின் குறிப்பு முற்றிற்று.

---

இனி இரண்டாம் பாகம் மரணக் குறிப்பு.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(இரண்டாம் பாகம்)

## மரணக் குறிப்பு

விநாயகர் துதி

வெண்பா

மன்னுமுதற்பாகமதை மகிழ்ச்சியுடனேயுரைத்தே
உன்னியரெண் டாம்பாகம் ஓதுதற்கு - இன்னிலமேல்
முத்தமிழ்க்குமுன்னுதவு மூஷிகவாகனமேறும்
அத்திமுகத்தோனே யருள்.

முகவுரை விருத்தம்

ஆதியெனும்பதினெண்மர் நூல்திரட்டி
அனுபோகக்கைமுறையு மடைவாய்சேர்த்து
ஓதினேனுலகோர்கள் மகிழநாளும்
உத்தமனேநாடிகுறி முதற்பாகத்தில்
கோதியிலாயிதுரெண்டாம் பாகந்தன்னில்
குறிப்பாகுமரணத்தின் குறியைத்தானுஞ்
சோதியாய்க்காண்பதற்குச் சூட்சமாகச்
செஞ்சியேகாம்பரமும் வெளியிட்டேனே.

நான்முக விருத்தம்

பார்த்திடவே வாதபித்தஞ் சிலேற்பனங்கூடி
பதறியேயரணைவால்போல் துடிக்கிலேநாடி
வேர்த்திடவே திரேகமது வேறுபட்டு
வினையாகமெய்யெங்கும் குழியுமாகில்

பார்த்திடவே யன்றோடி மரணமாகும்
பழியில்லையுன்மீது மறிந்துச்சொல்லு
தீர்த்திடுவேனென்றுபொருள் பறித்துப்பின்றல்
திகைக்காதேமரணகுறி தெளிவைட்டாரே

(இ - ள்.) வியாதியஸ்தர்களின் கையில் நாடி பார்க்கும் போது வாதபித்த நாடியானது ஓட சிலேற்பன நாடியானது பதுங்கி நிற்க நாடியானது அரணை வால்போல் துடிக்க தேகத்தில் வேர்வையானதுவிட உடம்பு யாத்தியந்தமுங் குவிந்த தாகில் மரணமென்று சொல்லவும், எ - று.

இடியதுபோல்நாடி யிடித்து வோடி
இயம்புமொருதேகமது மயங்கிக்காட்டி
புடையுருவாய்மூக்கினுங் கீழேதானும்
புசித்துமே வேர்வையது சொரியுமாகில்
வடிவானவிழிரெண்டு தூக்குமாகில்
வலித்துமேவிலாரெண்டுந் தூக்குமாகில்
கடுகவேயிக்குணங்கள் கண்டபேர்க்கு
கண்டிப்பாய்மரணமென்று கழறுவாயே.

(இ - ள்.) இடிபோல் இடித்து நாடியானது விழுந்து உடலானது மயங்கி மூக்கின்கீழ் வேர்வை யுண்டாகி கண்க ளிரண்டும் மறைந்து விலா ரெண்டும் வலிக்க இவ்வித குறிகள் கண்டால் மரணம், எ - று.

நன்மையென்றவாதபித்த நாடிதானும்
நடவாமல் தங்கியது மாயுமாகில்
துன்மையென்றசிலேற்பனமாம் நாடியப்போ
துடித்துமேதானோடி நடக்கிற்கேளும்
வன்மையென்ற வுடலதுவு மெழுப்பிதானும்
வளர்கின்ற மார்பதுவுங் குழிந்தேகாணில்
இன்னவிதகுணங்களுக்கு குறிதானப்பா
இயம்பினோர் கடிகைதொண்ணூற் றுறும்பாரே.

(இ - ள்.) கடிகை வாதபித்த நாடிகள் அடங்கி சிலேற்பன நாடியானது துடித்து நடக்குமாகில் தேகம் எழும்பும், மார்பு குழியும். இவ்வித குணங்கள் உள்ளவனுக்கு தொண்ணூற்றி யாறு கடிகைக்குள் மரணமாகுவன், எ - று.

ஆடியதோர்மஞ்ஞைபோல் கோழிபோலும்
அன்னம்போல்நடக்கின்ற வாதந்தானும்
நீடியதோரன்றுடி யட்டைபோல
நின்றுமேநியங்கியது போமாகேனும்
கூடியதோர்கிழமையது யேழிலேதான்
சொல்லுகின்றமரணகுறி யிதுவேயாகும்
நாடியே நாதாக்கள் சொன்னவாக்கை
நாட்டிலேநம்பியிதன் பரிசைபாரே.

(இ - ள்.) மஞ்ஞை கோழி அன்னம்போல் நடக்கின்ற வாத நாடியானது அட்டையைப்போல் தயங்கி யோமாகில் அவன் தனக்கு ஏழு நாளில் மரணம் என்று முன்னோர்கள் கூறுகிறார், எ - று.

அட்டையைப்போல்நடக்கின்ற பித்தநாடி
அதுசெய்யுங்குணக்குறியை யறையக்கேளு
துட்டமுள பறவணைபோல் வளைந்துதானும்
துடித்துமேபிரிந்துயது யோடுமாகில்
கெட்டியதா யண்டந்து மூன்றுநாளிலேதான்
கண்டுகொள் யவர்தனக்கே மரணமென்றே
இட்டமுடனவனெழுத்துக் கிழிந்துப்போச்சு
ஈயாதேமருந்துநீ யெட்டறில்லே.

(இ - ள்.) ஆமை அட்டையைப்போல் ஓடிய பித்த நாடியானது பாம்பைப்போல் வளைந்து பிரிந்து ஓடுமாகில், அக்குறியுள்ளானுக்கு மூன்றுநாள் அல்லது ஐந்துநாளில் மரணமாவானென்று முன்னோர் கூறுகின்றார், எ - று.

கண்டிடவே தவளைபாம்பு போல்நடக்கும்
கையிலுள்ள சிலேர்ப்பமென்ற நாடிதானும்
சண்டையிடும் பாவணைபோல் பிரிந்துவோடி
சகிக்காமல்தானதுவும் புடையக்கண்டால்
விண்டிடுவாய் மாதமொன்றில் மரணமென்று
விளங்கவேயிக்குறிகள் கண்டோர்க்கு
பண்டிதர்மேல் பழிவருமே மருந்தையீந்தால்
பலனமென்றவாசையினுல் பழிகொள்ளாதே

(இ - ள்.) தவளை, பாம்பு அட்டையைப்போல் நடக்கின்ற சிலேர்ப்பன நாடியானது சண்டைபோலும் தன்மையைப்

போல் பிரிந்து புடையுமாகில் அவன் தனக்கு ஒரு மாதத்தில் மரணமென்று அறியவும், எ - று.

மேதினியி லுள்ளவர்கள் எவருங்காண
மெய்யிதுவேயா னுரைக்க மேவிகேளீர்
ஓதியதோர் வாய்தனிலே யூளைசார்ந்து
உத்தமனே நாவதுவும் வரண்டுகாணில்
தீதுசெய்யுஞ்சிலேர்ப்பமெனும் நாடிதானும்
செரிமியேயெழுந்துவந்து விழுகுமாகில்
ஆதியர னமைத்தபடி யவனுக்கப்பா
அடுத்தநா ளிரண்டினிலே மரணம்பாரே.

(இ - ள்.) இப்பூலோகத்தின்கண் யாவற்றிராளும் நம்பும் படியாய் கூறுகின்றது. யாதெனில், வியாதியஸ்தர்களுக்கு வாயில் ஊளைசேர்ந்து நாவானது வரண்டு அத்துடன் சிலேர்ப்பன நாடியானது யெழுந்து செரிமி விழுமாகில் அவன் தனக்கு பரமேஸ்வரன் விதித்த வண்ணம் இரண்டு நாளில் மரணம், எ - று.

மெய்தனிலேபித்தமது நீங்கிதானும்
மெத்தெனவேவாய்வதுவும் தங்கிநிற்கில்
ஐயமதுமேலிட்டு வப்பால்கேளும்
அடுத்துடனேயிளப்பதுவுந் தோணுமாகில்
துய்யெனவேவிழியதுவும் மறைப்பதாகி
தோஷமாம்நீரதுவும் மெய்யில்கோர்க்கில்
ஐயமென்றயவனுடைய விதிதப்பாமல்
ஐந்தா நாள்மரணமென்று வறிந்துசொல்லே.

(இ - ள்.) தேகத்தில் பித்தமானது நீங்கி, வாயுவானது அதிகரித்து, ஐயமானது மேலிட்டு இளைப்புண்டாகி நேத்திரமானது மறைவு கொடுத்து, நீரானது மெய்யில் கோர்க்கில் அவன் தனக்கு ஐந்தாநாள் மரணமென்று அறியவும், எ-று.

துன்னியதோர்வாதபித்த சிலேர்ப்பனத்தில்
தொடர்கின்றஜன்னிகளை துலங்கக்கேளும்
பின்னியதோர்பாம்பைப்போல் சொல்லக்கேளும்
பிரண்டுமேதானடந்து நாடிதானும்
தன்னியமாய்தவளைப்போல் தயங்கியோடில்
தப்பாதுமரணமென்று தானேசொல்லி

பின்னவர்க்கைதொட்டுபணம் பறித்திடாதே
பிழைப்பென்றுமருந்தீய்ந்துப் பழிகொள்ளாதே.

(இ - ள்.) வாத பித்தத்தினோடு சிலேர்ப்பனம் தொடரு மாகில் ஜன்னி காணும், அப்போது பாம்பைப்போல் இரண்டு நடந்த நாடியானது தவளையைப்போல் மயங்கி நடக்குமாகில் தப்பாமல் மரணம் நேருமென்று அறியவும், எ - று.

என்னவேவார்த்தைதன்னை இயல்புடனிணங்கச்சொல்வேன்
முன்முகமார்புபக்க மூக்குடன்செவிகண்டங்கள்
சென்னிகங்குளிர்ந்துசோர்ந்து சிலேர்ப்பனஞ்சுருக்கஞ்செய்தால்
சொன்னநாள்இரண்டில்சாவாம் தொகுத்தறிந்துரைத்திடாயே.

(இ - ள்.) இன்னமும் மரணக் குறியுட செய்கைகள் சொல்லுவேன் என்னவென்றால் முகம், மார்பு, பக்கம், மூக்கு, காது, கண்டம், செவி இவை முதலானதும் குளிர்ந்திருக்கு மாகில் அப்போது அதில் சிலேர்ப்பனஞ்சேர்ந்து தேகத்தை சுருக்கஞ் செய்தால் இவ்வித குறிகுணமுள்ளவன் தனக்கு நாள் ஒன்றில் மரணமென்று அறியவும், எ-று.

கண்டநொந்துந்திவீங்கி கண்சிவந்துதளர்ச்சிதோன்றி
அண்டமும்பொரிமிவிம்மி அசைந்துவிடவிருக்குமென்ன
முண்டசமுகமும்பொன்போல் மூறுகசெரிந்துமூர்ச்சி
தண்டிளந்தமேவில் சாவதுதிண்ணமென்னே.

(இ - ள்.) கண்டமானது நொந்து உந்தியானது வீங்கி கண் சிவந்து வயிறு பொரிமி விம்மி முகமானது பொன்னிற மாகி முன் மூர்ச்சையானது வாங்கி தேகம் குளிர்ந்து இவ் விதமாக இருக்கும்போது, நாடியானது வீணையைப்போலும் தெரித்து ஓறுனைப்போலும், நடக்கில் அவன் தனக்கு மர ணம் நிச்சயமென்று அறியவும், எ - று.

சில்லெனசேடுடைத்து சிலேர்ப்பனமதுவேதோன்றில்
சல்லெனசரீரம்வேர்த்து தானுடல்குளிர்ந்துதோன்றில்
சொல்லதுகுளறிப்பேசி தூக்கமுஞ்சுழன்றுவீழில்
சொல்லிதபித்தத்தாலும் தீர்ந்திடாரோகமென்னே.

(இ - ள்.) தேகமானது சில்லென்று குளிர்ந்து அதில் சிலேர்ப்பனந் தோன்றில் சரீரமானது வேர்த்து உடம்பானது குளிர சொல்லானது குளறிப்பேச நித்திரையானது அதிக

ரித்து சென்னியானது சுழல தீராத பித்தரோகமா மென்றறி வீர்கள், எ - று.

மெய்யதோர்பகல்விரும்பி யிரவுதானுடலைமேவிச்
செய்யதோர்நாவறண்டு சேற்றுமநாடியோடத்
தொய்யவேசுவாசந்தானும் தொடர்ந்துமேவாங்குமாகில்
வெய்யகண்பரந்துதாவி விழிக்குநாளிரண்டில்சாவே.

(இ - ள்.) பகலில் இரும்பலுண்டாகி யிரவில் உடலைமேவி நோய் உண்டாகி நாவறண்டு சிலேற்பன நாடியானது ஓடில் அப்போது மேல்சுவாசம் வாங்க கண்ணானது தாவி பரந்து விழிக்குமாகில் அவன் தனக்கு இரண்டாம்நாள் மரணமென்று அறிவீர்கள், எ - று.

சாலவேவாதபித்தம் சிலேர்ப்பனந்தனித்தொன்றாகி
சாலவேபோஜனங்கள் சமைத்திடாதாக்ஷிசெய்யும்
சாலவேஜன்னிகோர்த்து தலைநொந்துஜலந்தான்கோர்க்கில்
சாலவேயசுவத்திட்டந் தள்ளிதவில்லாதென்றே.

(இ - ள்.) வாதபித்தத்தினுடன் சிலேற்பனமானது கூடாமல் தனித்து யெழும்பில் அப்போது சாதமிறங்காது. தாட்சி செய்யும் அத்துடன் ஜன்னி கோர்த்துக்கொண்டு தலைவலி யுண்டாகி வாயினால் சொள்ளென்னும் ஆவியானது போகும், எ - று.

கால்வளர்ந்துயருமூக்கும் கருவிழிசிவந்திருக்கும்
மேல்விழித்தயங்கத்தண்ணி மிஞ்தனித்தொடுங்குந்தண்ணீர்
கால்பெருதுதிரும்வாயுந் தான்கருத்திருக்குமிந்த
நால்வகைக்குறியுஞ்சொன்னோம் நமனுயிர்கவருவாரே.

(இ - ள்.) காலானது வளர்ந்து மூக்கானது யுயர்ந்துக் காட்டி கண் பார்வையானது மேல்நோக்க வாயானது கருத்துக்காட்ட இவ்விதமான நாலு குறிகளையுங்கண்டால் மரணம் நிச்சயமென்று அறிவீர்கள், எ - று.

புருவமேவட்டமாகி புயமலிந்திருக்குஞ்சோனை
பருகிநீர்தாவும்போதப் பஞ்சிடும்கண்ணும்வாயும்
மருவியகெர்ப்பந்தானும் மடைந்துகாணிருக்குமாகில்
வருகுமிக்குணங்களெல்லாம் மரணமென்றுரைக்கலாமே.

(இ - ள்.) புருவமானது வட்டமாகியும் திரேகமானது மழமழப்பாகியும் வேர்வை யுண்டாகி கண்ணும் வாயும் பஞ்

சடைந்து யிருக்குமாகில் அவன் தனக்கு மரணமுண்டாகும், எ - று.

போர்விழிமிரண்டுநாளும் புனல்விழிந்தயரநாளும்
சீர்சரவிழியிலெய்து தரித்திடாதேழுநாளில்
பார்விழிமொழியும்நாளில் பயின்றதுசுவையின்கூறும்
கூர்விழிநாசிவாசங் குறையுநாள்மூன்றில்சாவே.

(இ - ள்.) விழியானது மிரண்டு அதில் நீரானது வீழ காலானது வீங்க யிக்குறி கண்ட ஏழாம்நாளில் நாக்கில் தித்திப்பு தோன்றி மூக்கில் வரும் சுவாசமானது குறைந்ததாகில் அவன் தனக்கு மரணம் மூன்றும்நாள் என்று அறியவும், எ - று.

போஜனம்பொருந்தவிக்கல் பொருமுதல்புடைத்தல்சோர்தல்
ஆசனங்குளிர்ந்துகூற லகங்கைகால்பெருத்தேவீங்க
கோசமும்மேரவாங்கல் குளிர்ந்துபிற்குணியவாங்கல்
நாசிவெண்கருவியென்றே தவிர்ந்துநீர்விட்டுப்போமே.

(இ - ள்.) சாப்பிடும்போது விக்கலுண்டாகி திரேகருத்தல் குடைச்சலாக ஆசனமானது குளிர்ந்து கைகால்கள் பெருத்து வீங்க கோஜமென்னும் விரையானது ஏறலும் இறங்கலுமாக யிருக்க திரேக மாதியந்தமும் குளிர்ந்துக் காண மெய்யின் நிறம் வேறுபட நாடியானது இடியைப்போலிடித்து வீணையைப்போல் தெரிக்க மருந்தீய்வதில் பிரயோசனமில்லை மரணமாவான்; எ - று.

விட்டிடும்நீரடைத்தால் விழியிநீர்சிந்தச்சிந்தல்
அட்டமும்குளிர்ந்துக்கூந்த லங்கைகால்பெருத்தேவீங்கல்
உட்டனப்பேர்வசித்தல் உதறுதல்பிறப்புச்சேர்தல்
திட்டமாம்சாவுதிண்ணம் நாடியேகைதொடாதே

(இ - ள்.) சாதாரணமாக வருகின்ற நீரானது அடைத்துக்கொண்டு அத்துடன் விழியில் நீரானது கசிய திரேகமானது குளிர்ந்து கை கால்கள் பெருத்து வீங்க நாடியானது இடிபோல் முழங்க மெய்நடுக்க முண்டாகி குளிர்ச்சியானது சேர கைதொடாதே மரணமாவான், எ - று.

கைதொடில்புண்போல்நோகல் கருத்துடல்மழுமழுத்தல்
மெய்தொடில்திரேகம்நீலம் விழியதுசிவந்தபீளை

செய்யொழிகமலம்பொங்கி சிறுமுகங்குறுவேர்சிந்தல்
ஐவருமொடுங்கிநித்தம் யாடுவாராடாதெண்ணே.

*(இ - ள்.) கைகளைத் தொட்டு நாடிப்பார்க்கில் கையானது நொந்து திரேகமானது கருத்து மழமழப்புண்டாகி விழியானது நீலம்போலும் அதில் சிகப்புப் பீளைபெருக புந்தியிலும் முகத்திலும் வேர்வையானது கசிய யிக்குறி யுள்ளவர்களுக்கு ஐந்து பூதமும் ஒடுங்கி நாடியானது விழும், எ - று.*

சிரமதுகருத்துநொந்து செவியடைந்திருமலாகி
சுரமதுவெகுவதாக சேரைபோல்சிறுநீர்வீழ்ந்து
சரமதுசிதறிவீசி தாகமும்வெகுவதாகி
விரையவேவிழிதியங்கி மீளாறுமிடையாமென்றே.

*(இ - ள்.) தலையானது நொந்துக் கருத்து செவி மந்தமாகி யிரும்பல் கண்டு சுரம் அதிகரித்து சிறுநீரானது கலங்கலாகவும் சுவாசமானது அதிகரித்து தாகமுண்டாக கண் மயங்க அவன் மீளான், எ - று.*

மருந்திடவிரும்பிடாதே மரிபிறப்பிட்டுமேலும்
அரந்தரநிதங்கள்வீங்கி தாடியின்கீழேகட்டி
பரிந்துநீர்பெறவேவாங்கி பார்வையுமிருதியானால்.
மருந்திடவேண்டாம்நீயும் மரணமென்றறிந்துகொள்ளே.

*(இ - ள்.) வைத்தியரானவர்கள் பாபத்திற்குள் அகப்படாமல் காணவேண்டிய குறியாதெனில் வியாதியஸ்தர்களுக்கு வருத்த முண்டாகும்படி திரேகமானது வீங்கி எலும்பின்கீழ் கட்டியுண்டாகி அதில் நீர்க்கசிந்து நேத்திரம் மத்திபமானால் இக்குறியுள்ளவர்களுக்கு மருந்திடாமல் மரணமென்றுச் சொல்லவும், எ - று.*

மீன்றுவாய்வழுவழுத்து மேனியும்வெளுக்குமாகில்
தான்றியபேச்சுதானும் சவண்டிடராகமட்டும்
மிண்டியமரணமாக யிரெண்டரைகடிகைபெண்ணே
கூண்டிடுமிளப்புக்கூடி குறித்திடுமுயிரையன்றே.

*(இ - ள்.) வாயில் குழகுழப்புண்டாகி மேனியானது வெளுத்து பேச்சானது மாறுபாடாகப் பேசில், இரண்டரை நாழிகையில் மரணம், அத்துடன் இளைப்புத் தோன்றில் மூன்னதாகவே மரணமாகும், எ - று.*

ஏந்ததோர்சுரமுள்ளோர்க்கு யிணங்கவேவேர்வைதோன்றில்
வாய்ந்ததோர்பெருமூச்சுண்டாம் வாதநாடியுமேயாகில்
தேய்ந்ததுபிராணனென்று செப்பலாந்தெளிந்தோரெல்லாம்
சாந்தளங்கையார்காமன் கரும்புவில்பருவங்கண்ணீர்.

(இ - ள்) சுரமுள்ளவர்களுக்கு வேர்வையானது மீறி பெருமூச்சி யுண்டாகில் வாதநாடியான பிராணன் நில்லாதென்றும் சொல்லவும். இவ்வித குறியுள்ளோர்க்கும், எ-று.

முந்தியநாவுமெத்த கருப்பதாய்நாக்குமூக்கும்
தன்னிடகுணமுமாறி தவ்வியகுணமுமிஞ்சில்
எண்ணவேகுணமீதாகில் இதற்குநீரிளமைகூர்ந்து
உண்ணியேமருந்துசெய்தா லொழிந்ததுமரணமென்னே.

(இ - ள்.) நாக்கு மூக்கும் மெத்தக் கருத்து தன் குணமானது மாறி வேறு குணமுண்டாகி யிருக்குமாகில், அதற்கு இதில் கூறிய மருந்து செய்து கொடுக்க மரணம் நீங்கும், எ-று.

உண்டஊண்மொழியாதாகில் ஊண்மிகச்செல்லாதாகில்
கொண்டதோர்வாய்வுமெத்திக் குடல்வலியுறிகமாகில்
பண்டுசொல்மருந்துசெய்து பார்க்கவென்றெண்ணவேண்டாம்
வண்டுசேர்குழலினாளே மரணமென்றிதனைச்சாற்றே.

(இ - ள்.) சாப்பிடும்படியானவை செரிக்காமலும், சாதம் உள்ளுக்குக் கொள்ளாமலும், வாய்வு அதிகரித்து உடலில் வலிப்புண்டாகி யிருக்குமாகில் மரணமாவான், எ - று.

சாலவேசலத்திறேடே தான்விந்துவிழுகுமாகில்
ஏலவார்குழலினாளே யேழுநாளையில் நிற்கக்கொல்லும்
காலமேகதிரோன்றன்னில் கருதியதிங்கள்தானும்
மாலையிலில்லங்கன்று மாறிடில்மரணந்தானே.

(இ - ள்.) சிறுநீரானது விடும்போது அத்துடன் விந்துவானது விழுமாகில் காலமூர்த்தியில் கொல்லும், காலையிலும் மாலையிலும் வீட்டில் சேர்ந்திட மரணமாகும், எ - று.

தாநொருநாளுக்குநாள் தன்பலம்குறையுமாகில்
மானுறுவதனந்தானும் மரவெளுத்திருக்குமாகில்
குறைவரப்பெருமூச்சுண்டா யிருக்குமேபெருமூச்சுண்டாய்
மறைவரமரணமென்றும் மர்மமாயுரைத்திடாயே.

(இ - ள்.) நாளுக்குநாள் பலம் குறைந்து விந்தானது வெளுத்திருக்குமாகில் ஒரு மாதத்தில் பெருமூச்சுண்டாகி மரணமாவான், எ - று.

முதுகொடுவயிறும் வீங்கி மூலமும்தாதுகெட்டுச்
செதுசெவிகண்ணும்வாயும் செதிரியப்பரிசிதுன்னி
முதுந்தனலாறுமூன்று முதியவன்கிழேயாகில்
விதியவன்வசமேதென்று விட்டுநீயகன்றிடாயே.

(இ - ள்.) முதுகும் வயிறும் வீங்கி மூலமென்னும் தாதுவானது கெட்டு, செவியுங் கண்ணும் வாயும் பார்க்கக் குருதியிருக்குமாகில் மூன்று வாரம் வியாதியாயிருந்து மரணமாவான், எ - று.

வத்தியமலசலங்கள் மாற்றுள்ளசெவிகண்நாசி
உத்ததோர்கன்னம்நாக்கு உரிதிகள்பலனுமத்தும்
இத்தனைகுணமுங்கெட்டு யிருந்தனவியல்புகண்டால்
வித்தகர்முன்புசென்று மீளாவதருமைதானே.

(இ - ள்.) மலஞ் சலம் செவி கண் நாசி கன்னம் நாக்கு இவை முதலானதும் குறிகெட்டிருக்குமாகில் அவன் மீள்வது அரிதாகும், எ - று.

மரணக் குறிப்பு முற்றிற்று.

இனி மூன்றும் பாகம் மாத்திரை வகுப்பு.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(மூன்றும் பாகம்)

## மாத்திரை வகுப்பு

### விநாயகர் துதி

வெண்பா

அரையன்மால்மூவர்களும் அகலாமல்முன்னிற்க
வரமதாம்பதினெண்பேர் வாகடத்தை—தரைமீதில்
திரட்டினேன்மாத்திரைசெய் தேன்போல்மூன்றும்பாகம்
வறுட்டற வேழமுகன்வந்து.

### முகவுரை விருத்தம்

பதினெண்பேர்சித்தரவர் பகர்ந்தவாறே
பண்பானநாடியொடு மரணஞ்சொன்னேம்
சதியானபிணியகல யவிழ்தங்கூட்ட
சரக்குறிந்துவனுபானஞ் சுத்திசெய்ய
ததியானவைத்தியத் திறவுகோலில்
தானறிவீர்மாத்திரைகள் சகலநோய்க்கும்
மதிகொடுக்குமின்னூலை வெளியாய்ச்சொன்னேன்
மண்டலத்தில்கண்டுமன மகிழ்ந்துசெய்யே.

### நூன்முக விருத்தம்

செய்யப்பாமுறையொன்றும் பிசகிராது
சித்தியுள்ளமுனிவருடப் பாகமப்பா
மெய்யப்பாமானிடர்க்கு வேணுமென்று
மருமமுள்ளரகசியத்தை திறந்துவிட்டேன்

வையப்பா கைமுறையா மிந்தவித்தை
வருந்தியேசொன்னமொழிக் கருத்திலூணீ
செய்யப்பா யின்னூற்குக் குருவுவேண்டாஞ்
செஞ்சி ஏகாம்பரமும் செப்புவாரே.

## பேதிக்கு பகீரி மாத்திரை

நெல்லிக்காய்க்கெந்தகம் நேர்வாளஞ்சேறு
நேரானவங்காரம் ரசமுங்கூட்டு
சொல்லிவந்தநால்திலுசும் பலங்காலாக
சுத்திசெய்துநேர்வாளம் சேர்த்துக்கொள்ளு
தொல்லையில்லையிளநீர்விட் டரைத்துக்கேளு
துவரையளவாகவே யுருண்டைசெய்து
வல்லவனேநிழலுலர்த்தி வைத்துகொள்ளு
வாசகத்திலனுபானம் அறிந்துஉண்ணே.

(இ - ள்.) ரசம், நெல்லிக்காய், கெந்தகம், வங்காரம், சுத்தி செய்த நேர்வாளம் இந்த நாலு நினுசையும் வகைக்கு ¼-பலமாக யெடுத்து கல்வத்திலிட்டு இளநீர் வார்த்து அரைத்து பிறகு துவரைப் பிரமாணம் உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில் போட்டு வைத்துக் கொள்ளவும். 6-மாதக் குழந்தைகட்கு ஒரு மாத்திரை முலைப்பாலில் கொடுக்க 1-தடவை பேதியாகும், ஒருவயது குழந்தைகட்கு 2-மாத்திரை அல்லது 1½-மாத்திரை கொடுக்கவும். பெரியவர்களுக்கு தேனில் இரண்டு மூன்று மாத்திரை கொடுக்கலாம். மிளகுநீர் சாதம் சாப்பிடவும். சுரத்தில் கொடுக்க வேண்டுமானல் இஞ்சி சுரசத்தில் குழந்தைகட்கு ஒரு மாத்திரையும், பெரியவர்கட்கு இரண்டு மாத்திரையுங் கொடுக்கலாம். பத்தியம் அரையுப்பு, அரைப்புளி, முருங்கைப்பிஞ்சு, கத்திரிப்பிஞ்சு, சேர்த்துக்கொள்ளவும், எ - று.

## காடிநீர் பேதி

சித்தியாங்காடிநீர் பேதிகேளும்
சேர்த்திடுவாய்முத்தெண்ணெய் அன்னகாடி
பத்தியேபுளித்தமோ ரிவைகள்மூன்றும்
பார்த்துமேசமனிடையாய் சேர்த்துக்கொண்டு
உத்தமனேபடியரிக்கா லுள்ளேகொள்ளு
ஒருநாழிதான்பொறுத்துச் சொல்லக்கேளு.

சித்தமுடன்நீராகாரத்தி லவணமிட்டு
சாப்பிடவேபேதியது ஜாடும்பாரே

(இ - ள்.) முத்தெண்ணெய், அன்னகாடி, புளித்தமோர் இவை மூன்றுஞ் சமமாகச் சேர்த்து அரிக்கால் படி யுள்ளதாய் குடித்து சற்றுநேரம் பொறுத்து நீராகாரத்தில் உப்பு கரிக்கட் போட்டு ஒரு குவளை சாப்பிட பேதியாகும் பத்தியமில்லை எ - று.

## பித்த தேகத்திற்கு நீராகார பேதி

சிவதைவேர்புரசைவித்து இவைகள்ரெண்டும்
சேர்த்துக்கொள் வகைக்குகால்பலமதாக
இவைரெண்டும்பாலில்வேக அவித்தெடுத்து
இந்துப்புப்பலமரிக்கால் கூடச்சேரு
கவனமதாய்உலர்த்தி சூரணித்துக்கொண்டு
கணக்காகவாழாக்கு நீராகாரத்தில்
உவர்ப்பாக லவணமிட்டுத் தூளைப்போட்டு
உண்டிடவேபேதியது வாகும்பாரே.

(இ - ள்.) சிவதைவேரும், புரசைவித்தும் வகைக்கு பலம் காலாக யெடுத்து பாலில் வேகவைத்து யெடுத்து உலர்த்தி சூரணஞ்செய்து வைத்துக்கொண்டு, அதில் இந்துப்பு அரிக் கால் பலம் கலந்து பிறகு 5-ஆழாக்கு நீராகாரத்தில் உப்பு கரிக்கப்போட்டு மேற்படி தூளையும் அதில்போட்டு சாப்பிடவும் பேதியாகும், பகலில் சூப்பு சாதம், அல்லது மிளகுநீர் சாதம் சாப்பிடவும், எ - று.

## வயிற்றிலுள்ள கிருமிபூச்சிவிழ பேதி முறை

முருங்கைவேர்எலிச்செவியுந் திருபலாதி
மூன்றுமேயோரிடையாய் நிறுத்தெடுத்து
நுருங்கவேதானிடித்து யெடுத்துக்கொண்டு
நேராகஅரைப்படிதான் சலத்தில்போட்டு
குருங்கவேமூன்றுபங்கு சுண்டக்காய்ச்சி
குழவிகட்குசங்களவு யீந்தால்போதும்
பெருங்கவேபெரியோர்கள் வாழாக்குண்ண
பொல்லாதகிருமியது விழுகும்பாரே,

(இ - ள்.) முருங்கைவேரும், எலிச்செவியும், திருபலாதியும் இவைகளை நறுக்கி கியாழஞ்செய்து குழந்தைகட்கு சங்களவு கொடுக்க கிருமிவிழும், பெரியவர்களுக்கு ஆழாக்கு கொடுக்கவும். அரைப்படி ஜலம்வைத்து இறக்கவேண்டும், மிளகுநீர்சாதம் சாப்பிடவும். பத்தியமில்லை, எ - று.

## நாக்குப்பூச்சிவிழ பேதி முறை

புரசைவித்துபேய்பீர்க்கன் பிரண்டையோடு
புகழானவோமமுடன் இவைநாலுந்தான்
நிறையாகவகைக்குவொரு பலமேதூக்கு
நீரரைப்படியதனில் இடித்துப்போட்டு
குறையவேநாலிலொன்றாய் வற்றக்காய்ச்சி
குடித்திடுவாய் மூன்றுநாள்காலைநீதான்
வரையுமொருநாக்குப்பூச்சி வந்தேவிழும்
வகுத்தயிச்சாபத்தியத்தை யறிந்துவுண்ணே.

(இ - ள்.) ஓமம், புரசவிரை, பேய்ப்பீர்க்கு, பிரண்டை இவை நான்கும் வகைக்கு பலம் ஒன்றாக யெடுத்து இடித்து, அரைப்படி ஜலம் வைத்து, இடித்த தூளை ஜலத்தில்போட்டு அடுப்பேற்றி நாலிலொன்றாக வற்றக் காய்ச்சி மூன்று நாள் காலையில் சாப்பிட நாக்குப் பூச்சிகள் பந்து பந்தாய் வந்து விழும், இச்சாபத்தியமா யிருக்கவேண்டும், எ - று.

## குழந்தைகட்கு மலஜல கட்டுக்கு பேதி முறை

இலைக்கள்ளிவேப்பம்பட்டை இவைகள்ரெண்டு
எடுத்துக்கொள்வகைக்கு பலமஞ்சதாகும்
நலமாகமிளகுசுக்கு கடுக்காயுள்ளி
நாலுவெவ்வேர்ஒண்ணேகால் பலமேதூக்கு
குலமாகரவியுலர்த்தி யிடித்தெடுத்து
கொற்றவனேசீலையிலே வடித்துக்கேளு
முலைப்பாலில்காசிடைதான் குழவிக்கீய
மூண்டதோர்மலஜலங்கள் வெளியதாமே.

(இ - ள்.) இலைக்கள்ளி, வேப்பம்பட்டை, இவை வகைக்கு பலம்-5 கொள்ளவும். மிளகு, உள்ளி, சுக்கு, கடுக்காய் இவை வகைக்கு பலம் 1¼. இந்த 9-னுசும் வெய்யிலில் உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு குழந்தை

களின் பலமறிந்து மூலைப்பாலில் அல்லது வெந்நீரிலாவது ஒரு காசுயெடை கொடுக்க மலஜலக்கட்டு வெளியாகும், எ-று.

## பேதி கட்டுதற்கு அமிர்தசஞ்சீவி லிங்கக் குழம்பு

வங்காரம் ஜாதிலிங்கம் ரெண்டுபங்கு
வாமணக்கன்பருப்பதிலே நாலுபங்கு
பொங்கமுடன்வாளமெட்டுப் பங்குசேர்த்து
புகழாகஇவைகளெல்லாஞ் சுத்திசெய்து
தங்கவேகுண்டுமணிப் பிரமாணந்தான்
தான்கொடுக்ககுளிர்நீரில் பேதியாகும்
அங்ஙனமேவெந்நீரில் தான்கொடுக்க
ஆகாதுபேதியென்று வறிந்துகொள்ளே

(இ - ள்.) ஜாதிலிங்கம், வங்காரம் இவை வகைக்கு எடை இரண்டாகவும், ஆமணக்கன் பருப்பு நாலிடையாகவும், நேர் வாளம் எடை எட்டாகவும் இவைகளை எல்லாஞ் சுத்திசெய்து அரைத்து வைத்துக்கொண்டு குண்டுமணிப் பிரமாணம் எடுத்து குளிர்ந்த நீரில் கொடுக்க பேதியாகும். வெந்நீரில் கொடுக்க பேதிகட்டும், எ - று.

## விரோசனப் பேதி முறை

வெள்ளைக்காக்கணம்வேர் திப்பிலியும்
விராகனிடை யொன்றுகசேரு
கொள்ளவேமிளகதுவோ விராகன்ரெண்டு
கூட்டியேயிவைமூன்றுஞ் சொல்லக்கேளு
விள்ளவேதண்ணீர்விட் டரைத்துக்கொண்டு
விராகனெடைகுளிர்ந்தநீர் தன்னிலுண்ண
கள்ளமிலாபேதியது வாகுமப்பா
கண்டுக்கொள்ளிச்சாபத்திய மென்றுதானே.

(இ - ள்.) வெள்ளைக்காக்கணம்வேர், திப்பிலி இவை ரெண்டும் வகைக்கு விராகனிடை-1, மிளகு விராகனிடை 2, இம்மூன்றுங்கூட்டி ஜலம்விட்டு அரைத்து விராகனிடை யெடுத்து ஜலத்தில் கலக்கி உண்ண பேதியாகும், பத்தியம் இச்சாபத்தியம், எ - று.

## சண்பகப்பூ மாத்திரை பேதி முறை

சண்பகம்ஏலமுடன் லவங்கம்கோஷ்டம்
சரியானகடுகுரோ கணியோடைந்தும்
பண்பாக வகைக்கதுதான் விராகனென்று
பகருமொரு சுத்திசெய்த நேர்வாளங்கேள்
இன்பமுடன்விராகனைந்துக் கூடச்சேர்த்து
இசைவாகவெந்நீர்விட் டரைத்துக்கேளு
தன்மையுடன் அரைக்கழஞ்சு உருண்டைசெய்து
தான்கொடுக்கதேனிலேதான் பேதியாமே.

(இ - ள்.) செண்பகம், ஏலம், லவங்கம், கோஷ்டம், கடுகு ரோகணி இவை ஐந்தும் வகைக்கு ஒரு விராகனிடை சேர்த்து கூட சுத்திசெய்த நேர்வாளம் விராகனிடை ஐந்தும் கூட்டி வெந்நீர் விட்டரைத்து அரைக் கழஞ்சுப் பிரமாணம் உருண் டைசெய்து வைத்துக்கொண்டு தேனிலாவது சுக்கு கியாழத்தி லாவது ஒரு மாத்திரை கொடுக்க பேதியாகும் மிளகுநீர்சாதம் சாப்பிடவும், முருங்கை, கத்திரி பிஞ்சி சேர்க்கவும், எ - று.

## தித்திப்பு சுகபேதி குழம்புமுறை

ஓமஞ்சுக்குமிளகுடனே இவைகள்மூன்றும்
உத்தமனேவிராகனிடை வகைக்கோவொன்று
சேமமாம்ரஸ்தாளி பழமோபத்து
சேரப்பா திராக்ஷிப்பழம் பலமேயஞ்சி
சோமப்பாகடுகுரோகணி பலமோமூன்று
சுத்திசெய்தநேர்வாளம் பலமோவஞ்சி
ஆமப்பாகடுகெண்ணெய் பலந்தானென்று
ஆவின்நெய்பலம்ரெண்டு சேர்த்துக்கேளே.

(இ - ள்.) ஓமம், சுக்கு, மிளகு இவை மூன்றும் வகைக்கு விராகனெடை ஒன்று, ரஸ்தாளிப்பழம்-10, திராக்ஷிப்பழம் பலம்-5, கடுகுரோகணி பலம்-3, சுத்திசெய்த நேர்வாளம் பலம்-5, கடுகெண்ணெய் பலம்-1, ஆவின் நெய் பலம்-2 சேரும், எ - று.

சேர்த்துமேயத்தோடு புதியதேனும்
சிக்கெனவேபலமைந்து கூடவிட்டு
நேர்த்தியாய்க்கல்வமிட்டு நாலுசாமம்
நன்றாகவரைத்ததனை வழித்தெடுத்து

காற்றுபோகாமல்ஜாடி தனிலேவைத்து
காசிடைதான் அப் பத்தில் குழவிக்கீய
வார்த்திடவேசுகபேதி யதிகமானல்
வசம்புசுட்டுவெந்நீரில் குழைத்துயீயே.

(இ - ள்.) புதிய தேனைய் ஐந்து பலம் ஊற்றி கல்வத்தி லிட்டு நாலுசாமம் நன்ருய் அரைத்து வழித்தெடுத்து காற்று போகாமல் இருக்கின்ற கல்ஜாடியில் இந்த மருந்தை போட்டு வைத்துக்கொண்டு குழந்தைகளுக்கும் காசுயிடை யெடுத்து, அப்பத்தில் தடவிகொடுக்க இளப்பில்லாமல் சுகபேதியாகும். அப்படி பேதி அதிகமானல் வசம்பைசுட்டு வெந்நீரில் குழைத் துக் கொடுக்க பேதி நிற்கும். பத்தியம் இச்சா பத்தியமாக இருக்கவேண்டும், எ - று.

## சுகபேதி எண்ணெய் முறை

முருங்கைப்பட்டை முக்கரணைச்சாரைவேரும்
முதலாகயீருள்ளி இவைகள்மூன்றும்
நெருங்கவேசமனிடையாய் நிறுத்தெடுத்து
நேராகதட்டியதில் சாருவாங்கு
தருங்கவேமுத்தெண்ணெய் சமனைச்சேர்த்து
தான்காய்ச்சிசிறுகரண்டி யுண்ணக்கேளு
சிரங்கோடுமலபந்தம் சேராதோடும்
சித்தியென்றேயிச்சாபத்தியத்தைக்காரே.

(இ - ள்.) முருங்கைப்பட்டை, முக்கரணைச்சாரை வேர், ஈருள்ளி இவைகள் மூன்றுஞ் சமனிடையாக நிறுத்து இடித்து சார்பிழிந்து அந்தச் சாரளவு விளக்கெண்ணெய்விட்டு அடுப்பி லேற்றி காய்ச்சி இறக்கி வைத்துக்கொண்டு ஒரு கரண்டி வீதங் கொடுக்க பேதியாகும், கரப்பான், சிரங்கு இவைகள் தீரும். இச்சா பத்தியமாக விருக்க வேண்டும், எ - று.

## கியாழபேதி முறை

நிலாவிரை, கடுக்காய், கடுகுரோகணி, சுக்கு, மிளகு இந்த 5-தினுசையும் வகைக்கு ½-பலமாக யெடுத்து நறுக்கி மூன் ருழாக்கு ஜலத்தில் நறுக்கி யதைப் போட்டு அடுப்பிலேற்றி காய்ச்சி ¾ ஆழாக்குக்கு இறக்கி இந்துப்பு அதே பலம் போட்டு சாப்பிட பேதியாகும் பத்தியமில்லை.

## சீதபேதி கட்டும் முறை

பசரைக்கீரை இடித்து ஆழாக்கு சார்பிழிந்து பனைவெல்லம் 2-பலம் போட்டு இப்படி மூன்றுநாள் சாப்பிடவும், பேதி கட்டும், மீன், கருவாடு நீக்கவும்.

## சீதபேதிக்கு வேறு முறை

கையால் 1 பிடி மிளகெடுத்து உழக்கு எருமை தயிர் கொண்டுவந்து மிளகை அதில் போட்டு இராமுழுதும் ஊற வைத்து காலையில் மிளகையெடுத்து மைபோலரைத்து ஒரு கோப்பையில், போட்டு ¼-பலம் நெய்விட்டு குழம்பாய் கலக்கி மெழுகுபோல் செய்து சீனி, சர்க்கரை 2-பலம் போட்டு காலை மாலை மூன்றுநாள் சாப்பிட சீதபேதி நிற்கும்.

## பேதிக்கு எண்ணெய் முறை

சுக்கு, பாக்கு, சித்தரத்தை, மிளகு இவை 4 வகைக்கு பலம் ஒன்றாகவும், கடுகுரோகணி பலம் அரையாகவும், இந்துப்பு ½-பலமும் கடுக்காய் 2-பலமும், ஆக இந்த 7 தினுசையும் நறுக்கி கியாழமிட்டு காலாழாக்கு ஜலத்திற்கு இறுத்து அத்துடன் சித்தாமணக்கெண்ணெய் 1-பலம் விட்டு சாப்பிடவும் பேதியாகும், இச்சாபத்தியம்.

## இராத்திரி பேதிக்கு

வாளம், பூரம், ரசபஸ்பம், இவை மூன்றும் வகைக்கு பலம் காலாக வாங்கி கல்வத்திலிட்டு, 1 பிடிசாதம் போட்டு அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். இராத்திரியில் சாதம் சாப்பிட்டு படுக்கும்போது கொஞ்சம் சாதத்தில் முழு மாத்திரையாக திரேகத்திற்கு தக்கினதாய் 1 அல்லது 2 மாத்திரை வைத்து முழுங்கிவிடவும். மூன்றுவது ஜாம முதல் பேதியாகும். திரேகத்திற்கு அலுப்பிராது, காலையில் சூட்புசாதம் சாப்பிடவும். ரசபஸ்பம் செய்ய சாத்தியப்படா விட்டால் மருந்து கடையில் ¼-பலம் என்று கேட்டால் கொடுப்பார்கள்.

## பேதிக்கு காசிகட்டி மாத்திரை

காசிக்கட்டி விராகனிடை-6 தேன்விட்டு 1-ஜாமம் அரைத்து குண்டுமணிப் பிரமாணம் மாத்திரை செய்து வைத்

துக்கொள்ளவும். அநுபானம்: 1 மாத்திரையை பொடித்து வாயில்போட்டு கொஞ்சம் ஜலங்குடிக்கவும் பேதியாகும். வயிற்றுவலி, வாந்தி, கடினமான பேதி கண்டால் எலுமிச்சம் பழச்சாறு குடிக்க நிற்கும். அல்லது குளிர்ந்த ஜலத்தில் குளித்துவிட்டு மோர்சாதஞ் சாப்பிட நிற்கும். மாலையில் மிளகு கியாழம் சாப்பிடவும்.

## வாலபேதிக் குளிகை

மிளகு விராகனிடை-5, வாளம் விராகனிடை 5, சுக்கு ஓமம், ரோகணி, ஆமைஓடு, கோஷ்டம் வகைக்கு விராகனிடை-1, இவைகளெல்லாங் கல்வத்திலிட்டு பழஞ்சாறுவிட்டு அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைசெய்து வைத்துக் கொள்ளவும். 1-மாத்திரையை முலைப்பாலில் இழைத்து குழந்தைகளுக்கு கொடுக்க பேதியாகும் சன்னிசுரம், சீதசுரம் தீரும், அதிக பேதியானால் வெந்நீர்சாதங் கொடுக்கவும்.

## பூவரசன் பேதி

உண்ணுநீ புரசைவித்து ஆவின்பாலில்
உறுதியுடன் அரைத்துண்ண பேதியாகும்
சண்ணுமடா நோயெல்லாந் தீருந்திரேகம்
சவுக்கியமாம் சண்டாள கிருமிசாகும்
நண்ணுகின்ற கிருமிசாக யின்னமொன்று
நவில்கொன்ற மரத்துடைய கொழுந்துவாங்கி
வண்ணமுட னுப்பில்லா தவித்தேயுண்ண
மற்றுநாள் கூண்டோடே விழும்பாரே.

(இ - ள்.) பூவரசன்வித்து பலம்-¼ எடுத்து அம்மியிலாவது கல்வத்திலாவது வைத்து அரைத்து ஆழாக்கு பசும்பாலில் கலக்கி சாப்பிட பேதியாகும். வயிற்றிலுள்ள கிருமி பூச்சிகள் சாகும். அன்று இரவில் சரக்கொன்னை மரத்ினுடைய இலையில் கொழுந்தாகக் கொண்டுவந்து உப்பு சேர்க்காமல் அவித்து தின்ன மற்றுநாள் காலையில் மலத்தினோடு கூண்டாக வந்துவிழும், எ - று.

## துவரை பேதி

விழுமடா துவரையுட பேதிகேளு
மிதமாக நற்றுவரை வேகவைத்து

ஆழுமந்த துவரைநீக்கி ஜலத்தைவாங்கி
அப்பனே கரும்புவெல்ல மதிலேபோட்டு
குழுமந்த துவரைதான் வெல்லநீரை
சோராம லுண்டுவர பேதியாகும்
தாழுகின்ற துவரையிலே மிளகுபோட்டு
தண்ணீர்போல் காய்ச்சி பகல்சாதமுண்ணே.

(இ - ள்.) முழு துவரை ஆழாக்கு கொண்டுவந்து மூன்று ஆழாக்கு ஜலம் வைத்து ஆழாக்கு ஜலத்திற்கு இறக்கி நல்ல வெல்லாம் ½-பலம் போட்டு ரசம்வைத்து சாதம் சாப்பிடவும், எ - று.

மூன்றும் பாகம் முற்றிற்று.

---

☞ இனி நான்காம் பாகம் சகல வியாதிக்கும் மாத்திரை வகுப்பு.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(நான்காம் பாகம்)

## சகலவியாதிக்கும் மாத்திரை முறைகள்

### விநாயகர் துதி

கலி விருத்தம்

நான்காம்பாகம் நலம்பெறப்புவியினில்
பாங்காய்மாத்திரைப் பரணிவரைந்திட
நீங்காமலெந்தன் நாவிற்குடிபுகும்
ஓங்காரியுமை யருள்சுதன்காப்பாமே.

### முகவுரை விருத்தம்

சித்தரவர்மருமமதாய்ச் சொன்னநூலை
ஜெகத்தோர்க்குதெளிவர்க வேண்டுமென்று
உத்தமனேபதினெண்பேர் நூல்திரட்டி
உண்மையென்ற வனுபோகங்கண்டுதானும்
பத்தியதாய்பண்டிதரே யிந்நூல்தேடி
பார்மீதுமாத்திரைகள் செய்யுமார்க்கம்
சித்தமதாய்செஞ்சி யேகாம்பரந்தான்
செப்பினேன்கைமுறையாய் செய்துபாரே.

### நூன்முக விருத்தம்

ஜன்னிமுதலானதற்கும் ஆனந்தபைரவி மாத்திரை

கெந்தகம்நாவிக்கிழங்கு ஜாதிலிங்கம்
கிருடையுடன்வெண்காரஞ் சூதஞ்சேறு
தொந்தமுள்ளமனோசிலை யிவைகளாறும்
தோணவேவகைக்கு விராகனிடையேவாங்கி

அந்தமுள்ளயெலுமிச்சின் பழச்சாறுவிட்டு
அரைத்துசிறுபயறளவு மாத்திரைசெய்து
பந்தமரும்முலைப்பாலில் ஜன்னிக்குன்னை
பறக்குமடாசுரத்திற்கு இஞ்சிச்சாறே

(இ - ள்.) நாவிக்கிழங்கு, கெந்தகம், சூதம், ஜாதிலிங்கம், மனோசிலை, வெண்காரம் இந்த தினுசுகள் 6-ம் வகைக்கு விராகனிடை ஒன்று வாங்கி எலுமிச்சம் பழச்சாற்றில், இரண்டு ஜாமம் அரைத்து சிறுபயறளவு மாத்திரை செய்து வைத்துக் கொள்ளவும், ஜன்னிக்கு முலைப்பாலில் கொடுக்கவும். குளிர் காய்ச்சலுக்கு இஞ்சிச் சாற்றில் கொடுக்க தீரும் இச்சாபத்தியம், எ - று.

## குழந்தைகள் விடாத கழிச்சலுக்கு கட்டுவாதி மாத்திரை

ஜாதிக்காய், ஜாபத்திரி, அதிவிடையம், அபினி, இந்த நாலு தினுசும் வகைக்கு விராகனிடை 2½-யாக நிறுத்தெடுத்து நல்லெண்ணெயில் தோய்த்து 2-ஜாமம் அரைத்து பணவிடையாக உருண்டை செய்து முலைப்பாலில் கொடுக்கவும். 1-நாளைக்கு காலை மாலை உச்சி மூன்று தடவையும் கொடுக்க பேதி நிற்கும்.

### கிராணி கழிச்சலுக்கு

ஜாதிக்காயபினியொடு லவங்கங்கிராம்பு
சரியானஅதிவிடையம் சுக்கோடாறும்
ஒத்தேவகைக்குவொண் ணேகால்விராகன்
இடையாகநிறுத்தெடுத்து மியம்பக்கேளு
மாதளம்பிஞ்சிரெண்டிடல் யெள்ளெண்ணெய்வார்த்து
மறவாமல்கரிக்கிமுன் தினுசுஞ்சேர்த்து
ஆதியென்றதயிர்வார்த்து அரைத்தெடுத்து
அருந்துவாய்சுண்டைக்கா யளவுதானே.

(இ - ள்.) அபினி, லவங்கம், ஜாதிக்காய், அதிவிடையம், கிராம்பு, சுக்கு வகைக்கு 1¼-விராகனிடையாக எடுத்து மாதளம் பிஞ்சு இரண்டு எண்ணெய் வார்த்து கரிக்கி மேற்படி தினுசுகளுங் கூட்டி தயிர் வார்த்து அரைத்து சுண்டைக்காய் பிரமாணம் உருண்டைசெய்து தயிரில் மூன்றுநாள் கொடுக்கத் தீரும் இச்சா பத்தியம், எ - று.

## மாந்தகழிச்சலுக்கு மாத்திரை

ஜாதிலிங்கம் விராகனிடை 4, திப்பிலி விராகனிடை-1, ஆவின்பால் விட்டு ஒரு ஜாமமரைத்து பயறளவு மாத்திரை செய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும், அனுபானம்: கரசனுங்கண்ணி, மிளகு, நாயுருவிவேர், பிரண்டைவேர், வசம்பு இந்த 5-தினுசும் சாம்பலாக்கி கருஞ்சீரகம் வெடிக்கவிட்டு கொஞ்சியிலையை சிவக்க வறுத்து உழக்கு ஜலம் விட்டு சுக்கு தட்டி போட்டு ஆழாக்கு கியாழமாக காய்ச்சி யிறக்கி ஒரு பாலாடை கியாழத்திற்கு ஒரு மாத்திரை இழைத்துக் கொடுக்க மாந்தக்கழிச்சல் நிற்கும்.

## வெள்ளைக்கு மாத்திரை

ரசகற்பூரமொடு ரசசெந்தூரம்
வெவ்வேருய்விராகனிடை ஐந்துகொள்ளு
சரியாகசெந்தகந்தான் விராகன்கூட்டு
சங்கங்குப்பிச்சாற்றிலொரு ஜாமமாட்டி
வசமாகபணவிடைதான் குளிகைசெய்து
வருந்தியேவொருமாத்திரை சுக்குதூளில்
நிஜமாகமூன்றுநாள் காலையுண்ணு
நிலைவிட்டுவோடுமடா தீராவெள்ளை.

(இ - ள்.) ரசகற்பூரம் விராகனிடை-5, ரசசெந்தூரம் விராகனிடை-5, கெந்தகம் விராகனிடை-1 இந்த மூன்றும் கல்வத்திலிட்டு சங்கங்குப்பி சாற்றினுல் 1-ஜாமம் அரைத்து பணவிடை பிரமாணம் குளிகை செய்து சுக்குத்தூள் ஒரு சிட்டிகையில் ஒரு மாத்திரை வைத்து காலையில் கொடுக்கவும். 3-நாள் கொடுக்க தீராத வெள்ளை மேகப்பிடிப்பு தீரும். இச்சா பத்தியம், எ - று.

## நாயசுரத்திற்கு மாத்திரை

அரிதாரம்விராகனது மூன்றேயாகும்
அதனேடுரசம்ஒன்று கெந்திரெண்டாம்
சரியானமனேசிலை விராகனென்று
ஜாதிலிங்கமைந்தோடு வெண்காரமாறு
நிரையானகடுகுரோ கணிதானேழு
நேர்வாளமெட்டுடனே நாபிவொன்று

குறையாமல்பழஞ்சார்விட் டரைத்துக்குன்றி
கோரியேமாத்திரை நீ செய்துலர்த்தே.

(இ - ள்.) ரசம் விராகனிடை 1, கெந்தி விராகனிடை 2, அரிதாரம் விராகனிடை-3, மனோசிலை விராகனிடை-1, ஜாதி லிங்கம் விராகனிடை-5, வெண்காரம் விராகனிடை-6, கடுகு ரோகணி விராகனிடை-7, சுத்திசெய்த நேர்வாளம் விராக னிடை-8, நாபி விராகனிடை-1 இவையெல்லாம் எலுமிச்சம் பழச் சாறுவிட்டு அரைத்து குன்றிப்பிரமாணம் மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். இஞ்சிச் சாற்றில் வைத்துக் கொடுக்கவேண்டியது. இச்சாபத்தியம், எ - று.

## லவங்காதி மாத்திரை

கேளப்பாவாளமுடன் லவங்கந்தானும்
கண்மணியேவகைக்குவிராக னிடைதானென்று
கேளப்பாவங்காரம் பூரம்லிங்கம்
கருத்தாகவிராகனென்று சேர்த்துக்கொள்ளு
கேளப்பாபழஞ்சார்விட் டரைத்துகுன்றி
கணக்காகமாத்திரைதான் செய்துலர்த்தி
கேளப்பாஇஞ்சிசாற்றில் சுரத்திற்குண்ணு
கெடுதிசெய்யும்ஜலுப்புக்கோ முலைப்பால்தேனே.

(இ - ள்.) லவங்கம் வாளம் இவை இரண்டும் வகைக்கு விராகனிடை-1, பூரம், லிங்கம், வங்காரம் இந்த மூன்றும் வகைக்கு விராகனிடை-1 இவைகளை கல்வத்திலிட்டு எலுமிச் சம்பழச் சாறுவிட்டு 2 ஜாமமரைத்து குண்டுமணி பிரமாணம் மாத்திரை செய்து, நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு சுரத் திற்கு இஞ்சி சுரசத்தில் கொடுக்கவும். ஜலுப்பு முதலான தற்கு தேன் அல்லது முலைப்பாலில் சாப்பிட தீரும், எ- று.

## இராஜபூபதி மாத்திரை

உலர்ந்த லிங்கம், நெல்லி கெந்தகம், வெங்காரம், வாலை ரசம், நாபி, மனோசிலை, சுக்கு, திப்பிலி, மிளகு, ஏலரிசி இவை யெல்லாம் வகைக்கு விராகனிடை-1, இவைகளை கல்வத்திலிட்டு இஞ்சிச் சாற்றில் 1-ஜாம மரைத்து மிளகளவு மாத்திரை செய்து வைக்கவும். அனுபானம்: முலைப்பால், தேன், திரி

கடுகு சூரணம், இஞ்சி சுரசம் இதில் 1-மாத்திரை கொடுக்க, சகல சுரமும் தோஷமும் தீரும். கடும்பத்தியமாக இருக்க வேண்டும்.

## சுரங்கள் ஜன்னிக்கு வைரவானந்தக் குளிகை

சுக்கொடுமிளகுதிப்பிலி வெங்காரந்தான்
சேர்த்துக்கொள்ரசம்நாபி நெல்லிகெந்தம்
பக்குவமாய்ஜாதிலிங்கம் இவைகளெட்டும்
பகுத்துமேவகைக்குவிராக னெடைதானென்று
சிக்கெனவேபழஞ்சாறுவிட் டரைத்துக்கொண்டு
செய்யப்பாஉளுந்தளவு மாத்திரைதான்
நிக்கவேசுத்தியொடு வனுபானங்கள்
நிகழ்த்தியவாசகத்தில் கண்டுவுண்ணே.

(இ - ள்.) சுக்கு, திப்பிலி, மிளகு, வெங்காரம், ரசம், நாபி, நெல்லி கெந்தகம், ஜாதிலிங்கம் இவைகளை கிரமப்படி சுத்தி செய்து 1-விராகனெடையாக நிறுத்தெடுத்து, எலுமிச்சம் பழச் சாறுவிட்டு அரைத்து உளுந்துபிரமாணம் மாத்திரை செய்து சீசாவில் வைத்துக் கொள்ளவும், அனுபானம்: இஞ்சி சுரசம், தேன், மூலைப்பால், பஞ்சமூலக்கியாழம் இவைகளில் எதிலேனும் 1-மாத்திரை யிழைத்துக் கொடுக்கவும், நோய்க்கு தக்கவாறு யோசித்து இரண்டு வேளை கொடுத்தாலுங் கொடுக் கலாம். ஜன்னி சுரம் சிலேற்பனம் தீரும். கசப்பு புளிப்பு மாங்கிஷம் நீக்கவும், எ - று.

## ஜீவசஞ்சீவிக் குளிகை

சுக்கு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், வசம்பு, சித்திரைமூலம் வேர்ப்பட்டை, சீந்திற்கிழங்கு, சேராங்கொட்டை, வாய்விளங்கம், நாபி இவைகளை சமனிடையாக தூக்கி கல்வத்திலிட்டு கோசலம் விட்டரைத்து குண்டுமணி பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில்போட்டு வைத்துக் கொள்ளவும். இதற்கு அநுபானம்: அஜீரணத்திற்கு 1-மாத்திரை, வாந்தி பேதிக்கு 2-மாத்திரை, பாம்பின் விஷத்திற்கு 3-மாத்திரை, சன்னி பாதத்திற்கு 4-மாத்திரையாக இரோக திடமறிந்து இஞ்சி சாற்றிலிடவும்.

## மகாபோகக் குளிகை

தங்கரேக்கு விராகனிடை-1, கஸ்தூரி விராகனிடை-1, கோரோஜனை விராகனிடை-7½, பச்சைகர்ப்பூரம் விராகனிடை-5, குங்குமப்பூ விராகனிடை-5, மயில்ரோஜனம் விராகனிடை-1, படிகாரன்னம் விராகனிடை-½, இவைகளை ஈசுரமூலிரசத்தால் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு இரவில் புளிநீக்கி போஜனஞ் செய்தபிறகு 1-மாத்திரை சாப்பிட்டு 5-பலம் பசும்பால் சாப்பிடவும். போகத்திற்கு முயலுங்கால் அதிக உல்லாசமும், மனக்களிப்பும் சகல சீதளசுர ஜன்னிகளும் நீங்கும்.

## பூப்தி மாத்திரை

நாபி, சுக்கு, சூதம், திப்பிலி, தாரம், மிளகு, கெந்தி, காயம் இவைகள் சமனிடையாகச்சேர்த்து சித்திரமூலக் கியாழத்தில் 7-நாள் அறைத்து மிளகுப்பிரமாணம் மாத்திரை செய்து தேன் அல்லது இஞ்சி சுரசத்திலிட ஜன்னி, சுரதோஷம், வாதம், வாய்வு, குன்மம், நாவறட்சி, க்ஷயகாசம், மேகம் இவைகள் தீரும்.

## கஸ்தூரி மாத்திரை

கஸ்தூரி, குங்குமப்பூ, கோரோஜனை, பச்சைக்கர்ப்பூரம், லவங்கம், வால்மிளகு, ஏலக்காய், கர்ப்பூரம், ஜாதிக்காய், ஜாபத்திரி, மிளகு, திப்பிலி மேற்கண்ட தினுசுகள் கஸ்தூரி மாத்திரம் 2-விராகனிடை, மற்ற தினுசுகளெல்லாம் வகைக்கு 1-விராகனிடையாக வாங்கி லவங்கக் கியாழத்தில் அறைத்து சிறு பயறு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில்போட்டு வைத்துக்கொள்ளவும். தோஷம், நாவறட்சி, ஜலுப்பு, தலைபாரம் இவைகளுக்கு முலைப்பாலிலிட தீரும், இச்சாபத்தியம்.

## திசைமுகக் குளிகை

பச்சைகர்ப்பூரம், லவங்கப்பட்டை, ஜாதிக்காய் வகைக்கு விராகனிடை-2, இதற்கு சரியிடை வாளம்சேர்த்து குமரிச்சாறு விட்டரைக்கவும். உளுந்து பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்திச் சீசாவில் வைக்கவும். அனுபானம்: சர்க்கரையில் 1-மாத்திரை கொடுக்க பேதியாகும், சுரம் நிற்கும்; இச்சாபத்தியம்.

## சுரங்களுக்கும் ஜன்னிக்கும் மாத்திரை

### விருத்தம்

போமென்ற சர்வநோயெல் லாந்தீரப்
　புகலுகிறே னைந்த மாத்திரைதான்
தாமென்ற திரிகடுகு தாரம்இந்து
　தனியான வாளமொடு நாவிலிங்கம்
வேனென்ற சமனெடைதான் கல்வத்திலிட்டு
　வெள்ளுள்ளித் தைலமுட னிஞ்சிச்சாறும்
ஆமென்ற ஏழுநாள் மயனம்போல
　ஆட்டியே குன்றியள வுண்டைசெய்யே.

### இதுவுமது

செய்தவுண்டை நிழலுலர்த்திச் செப்பிலிட்டுச்
　சிறப்பான நெற்புடத்தி லிட்டுவாங்கு
கொய்தமுள்ள விஞ்சிச்சாறு தேனிலூட்டு
　தொலையாத ஜன்னியதின் மூன்றுமோடும்
எய்தலுறு மூவேழு தோஷமெங்கே
　முளையான பதினெட்டுச் சுரமுமெங்கே
ஐதவண்ட வாதமென்பதுவு மெங்கே
　அதில்பிறந்த நோயெல்லா மெங்கேபோச்சு?

## பிள்ளைகள் சகல கழிச்சலுக்கும் உருண்டை

ஜாதிக்காய், ஜாபத்திரி, லவங்கம், ஏலம், அதிமதுரம், அதிவிடையம், அபினி, கஞ்சா, குரோசாணி, கோரக்கிழங்கு, வெந்தயம், சீரகம், சிறுநாவிற்பூ, புளியாரை, காட்டாத்திப்பூ, மாதளம்பிஞ்சு, வாழைப்பூ, இவையெல்லாம் சமமாகச்சேர்த்து இடித்து பிட்டவியலாக அவித்தெடுத்து வாழைப்பூ சாற்றிலாவது மாதுளம்பழச் சாற்றிலாவது அரைத்து மிளகுபோல் உருண்டைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு ஒரு மாத்திரையை பொடித்து சர்க்கரையில் கலந்து கொடுக்கவும். இப்படி அந்தி சந்தி கொடுக்க நீங்கும்.

## சகல சுரத்திற்கும் மாத்திரை

ஆடுதின்னாப் பாளைவேரை நிழலிலுலர்த்தி கருவாய்ப் பட்டை சமன் கூட்டி பொடித்து வஸ்திரகாயஞ்செய்து எலுமிச்சம்பழ ரசத்தாலாட்டி, பருத்திக்கொட்டை பிரமாணம்

மாத்திரைசெய்து இஞ்சி ரசம், தேன் இதுகளில் கொடுக்க நீங்கும்.

## ஆராத ரெணங்களுக்கு மூலாம்

லிங்கம், பூரம், மூதார்சிங்கு நிறுசுக்கு ¼-பலம் கொண்டு வந்து கல்வத்திலிட்டு மைபோல் பொடிசெய்து வைக்கவும். படிகாரம் காலேயரிக்கால் பலம் ஒரேகட்டியாய் கொண்டுவந்து கட்டை நெருப்பில் வைத்து பொங்கின பிறகு சூரணத்துடன் வைத்து, நான்கையும் மைபோலரைத்து பசும் வெண்ணெய் 1-பலத்தில் கலந்து குழப்பி ஒரு பரணியில் வழித்துக் கொள்ளவும், கடுக்காய், காசிகட்டி நிறுசு ஒன்றுக்கு ¼-பலம் கொண்டு வந்து இடித்து ஒரு பாத்திரத்தில் 1-படி தண்ணீர் விட்டு இந்தத் தூளை கொட்டிக் காய்ச்சி ¼-படி ஜலத்திற்கு யிறக்கி ரெணத்தைக்கழுவி துணியால் துடைத்துவிட்டு இந்த மூலாமைப் போடவும் ஆராதரெணம் ஆறும்.

## பல் நோய்க்கு பொடி

பறந்துபோம்பல்லுநோய் பல்லுக்குத்தல்
பல்புழுகுரெத்தம்விழல் இவைகளெல்லாம்
எருக்கயிலைபழுப்புதனை அரைத்துக்கொண்டு
இரண்டுபுகைகந்தைசுத்தி சாணிபூசி
சிறுக்கவேபுடம்போட்டு சூரணமாக்கி
சிக்கெனவேமறுபடியும் எருக்கும்பாலால்
தருக்கித்துபில்லைதட்டி ஓட்டில்வைத்து
தட்டாமல்மூன்றெறுவாய் புடத்தைப்போடே.

போடுமூன்றும்புடமும் போட்டுக்கொண்டு
பத்திரமாய்அதைவேறே வைத்துக்கொண்டு
தேடவேமுடக்கத்தான் சமூலத்தோடே
தேரினதாய்கடுக்காயுஞ் சுக்காங்கல்லு
கூரிடவேசரிவேலன் பட்டை துத்தம்
கூட்டியைந்தும் வோரிடையாய்யிடித்துதூளாய்
ஜாடுவாய்ஜலம்விட்டு மைபோலாட்டு
சாந்துபோலானபின்பு பில்லைதட்டே.

பில்லைதட்டிவெய்யிலிலே உலர்த்திக்கொண்டு
பின்னெடுத்துஒருவறட்டி யாலேசுட்டு

சொல்லிவைத்த யெருக்கன்சூரணத்தினோடே
சேர்த்திரண்டும் ஒன்றாகக்கலந்துகொண்டு
பல்லுக்குஅந்திசந்தி யெட்டுநாள்தான்
பால்மாறுமல்துலக்கி வந்தாயானால்
தொல்லையந்தபல்லிலுள்ள நோய்களெல்லாம்
துஷ்டனென்றேவுன்னைவிட்டு வோடும்பாரே.

(இ - ள்.) எருக்கம்பழுப்பு 50-கொண்டுவந்து கல்வத்தி விட்டு கட்டியாய் நெகிழ அரைத்து உண்டைசெய்து துணி யால் இரண்டுபுரை சுத்தி சாணியைப்பூசி வெய்யிலில் காய வைத்து காய்ந்த பிறகு காடை புடம்போட்டு தணித்த பிறகு துணியைப் பிரித்தெடுத்துவிட்டு, ஒரு பாத்திரத்தில் எருக்கம் பாலை கொண்டுவந்து அம்மியில் சூரணத்தை வைத்து, பாலை விட்டு நெகிழ அரைத்து பில்லைதட்டி வெய்யிலில் காயவைத்து, பானைவோட்டை இரண்டு பில்லை நறுக்கி ஒரு பில்லையின் பேரில் மருந்தை வைத்து மற்றொரு பில்லைமேல்மூடி மூன்று வறட்டியில் புடம்போட்டு சூரணத்தை ஒரு டப்பியில் வைக்க வும். முடக்கத்தான்வேர் சமூலம் 5-பலம், கடுக்காய் தோல் 5-பலம், கரிவேலம்பட்டை 5-பலம், மயில்துத்தம் 2-பலம் இது களை மைபோலரைத்து லேசாக பில்லைதட்டி வெய்யிலில் காய வைத்து, ஒரு வறட்டியில் சுட்டு எருக்கம்பழுப்பு சூரணத் துடன் சேர்த்து காலை மாலை பல் தேய்க்கவும். பல் நோய், பல்லில் ரத்தம் வருதல், பல்லில் புழு விழுதல், பல் சொத்தை விழாமை, தந்தவியாதிக்கு சஞ்சீவி யென்றறியவும், எ - று.

## சாதாரண பல்பொடி

பாரப்பாமுள்ளியெனுங் கண்டங்கத்திரி
பாண்டத்திலிட்டு கருக்கியெடுத்ததை
ராப்பகல்நித்தந் துலக்கியேவந்திடில்
ராவணன்போலே மடிந்திடும்உண்மையே.

(இ - ள்.) கண்டங்கத்திரிக்காய் முற்றினதாயும் பழுத்த தாயும் ஒரு வீசை கொண்டுவந்து வெய்யிலில் காயப்போட்டு, காய்ந்த பிறகு ஒரு சட்டியை அடுப்பில் வைத்துக் காய்ந்த காயைச் சட்டியில் வாரிப்போட்டு வறுத்து சாம்பலான பிறகு ஒரு பாத்திரத்தில் வைத்துக்கொண்டு காலை ஒரு சிட்டிகை

யெடுத்துப் பல் துலக்கவும். பல்லில் பூச்சி சேராது பல்லுக்கு உறுதியாம், எ - று.

## கலிக்கம்

பெருங்காயம், திப்பிலி, மிளகு, வெள்ளுள்ளி, கிராம்பு இவை சமனிடையா யெடுத்து கல்வத்திலிட்டு வெற்றிலைச்சாறு, குப்பமேனிச்சாறு, வெள்ளைசாரணை சாறுவிட்டு ஒருஜாம மரைத்து நிழலுலர்த்தா யுலர்த்தி வைத்துக்கொண்டு முலைப் பாலில் உரைத்து கண்ணிலிட ஜன்னிமுதலானதும் நீங்கும்.

நான்காம் பாகம் முற்றிற்று.

---

இனி ஐந்தாம் பாகம் சூரண வகுப்பு.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

## (ஐந்தாம் பாகம்)

## சூரண முறைகள்

### விநாயகர் துதி

விருத்தம்

பூரணமாகவிந்த புவிதனிலுள்ளோரெல்லாம்
சூரணமுறைகடன்னை சுருக்கமாயறிந்துகொள்ள
நாரணன்மருகோனாதி நற்றமிழ்க்குதவிசெய்ய
வாரணமுகத்தோனெங்கள் வைங்கரன்காப்புத்தானே.

### முகவுரை விருத்தம்

சங்கரனேடயன்மாலுஞ் சத்திகாக்க
சர்வவுயிரும்படைக்கும் பிரமங்காக்க
பொங்குமுடன்வைத்திய திறவுகோலில்
புகழானஇதுஐந்தாம் பாகமப்பா
சங்கையிலாசூரணத்தின் முறைகடன்னை
சாற்றுகிறேன்பண்டிதர்க்குஞ் சகலபேர்க்கும்
இங்கிதமாய்கண்ணுற்றுக் களிக்கவேதான்
இயம்பினேன்செஞ்சி ஏகாம்பரந்தானே.

### நூன்முக விருத்தம்

### திரிகடுகுசூரணம்

சுக்குதிப்பிலிமிளகு யிவைகள்மூன்றும்
சரியிடையாய்தூக்கியே யுலர்த்திடித்து
பக்குவமாய்வஸ்திரகாயஞ் செய்துக்கொண்டு
பாலகனேகாலணா யிடைதானப்பா

சிக்கெனவே பனைவெல்லந் தன்னிலுண்ணு
சீராகபதினஞ்சு நாள்தானப்பா
துக்கமுறும்வாய்வோடு மாந்தக்கழிச்சல்
துஷ்டனென்றேஉன்னைவிட்டு வோடும்பாரே.

(இ - ள்.) சுக்கு, திப்பிலி, மிளகு, சரியிடை தூக்கி உலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்து சீசாவில் வைத்துக் கொண்டு வேண்டியபோது காலணு எடை சூரணத்தை பனை வெல்லங்கூட்டி பிசைந்து சாப்பிடவும். 8-10-15-நாள் கொள்ள வாய்வு மாந்தக் கழிச்சல் முதலான வியாதிகள் தீரும். மற்ற மேகாதி பற்பங்களுக்கும் இது அநுபானமென்றறிக, எ - று.

## மேகராஜாங்க சூரணம்

வெட்டிவேர், சீரகம், லவங்கப்பட்டை, ஜாதிக்காய், ஜாபத்திரி, கிராம்பு, கோஷ்டம், நெல்லிவற்றல், கிலேப்பனங்கிழங்கு, அரேணுகம், முந்திரிப்பழம், பேரீச்சம்பழம், குங்குமப்பூ, கோரோஜனை, சிறுநாவற்பூ, தாமரை வளையம், அதின் தாது, பச்சைக்கர்ப்பூரம், சந்தனம், திரிகடுகு, அதிமதுரம், நெற்பொரி, அமுக்குராங் கிழங்குகள், சிங்கி, தக்கோலம், குங்குமப்பட்டை மேற்கூறிய தினுசுகளெல்லாம் வகைக்கு பலம்-½ யெடுத்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து மேற்கூறிய சூரணயிடைக்கு சீனி சர்க்கரை கலந்து வேளையொன்றுக்கு திரிகடிகைப் பிரமாணம் ஆவின் வெண்ணெயில் 1-மண்டலங் கொள்ளவும். கை கால் எரிவு, எலும்புருக்கி, நீர்தாரை வழி யாய் மோர்போல் இறங்கும் கற்பிரமியம், நீர் கிரிப்பு, கல்லடைப்பு, நீர்த்தாரை யெரிவு, தேக வறட்சி, உடல் சுரம், பித்தக்ஷயம் தீரும். இச்சாபத்தியம்.

## குங்கிலியச் சூரணம்

குங்கிலியம்ஒருபலந்தான் கொண்டுவந்து
கொற்றவனேஐந்திளநீர் நீரும்விட்டு
தங்கவேயிவைரெண்டுங் காய்ச்சியேதான்
தண்ணீரெல்லாம்சுண்டினபின் இறக்கிக்கொண்டு
பொங்கமுடன்கல்வத்திட் டரைத்துதானும்
புகழாகஅரிசியிடை நெய்யிலுண்ண
தங்குமொருநாபி ரணம் பறந்தேபோகும்
தானுரைத்த கைமுறையை கண்டுசெய்யே.

(இ - ள்.) வெள்ளைக் குங்கிலியம் 1-பலம் கொண்டுவந்து 5-இளநீர் உடைத்துச் சட்டியிலிட்டு குங்கிலியக்கட்டியை அதில் போட்டு அடுப்பேற்றி நீர் சுண்டுகிறவரையில் எரித்து பிறகு குங்கிலியக்கட்டியை யெடுத்து கல்வத்திலிட்டுப் பொடித்து சூரணமாக்கி புட்டியில் வைத்துக்கொண்டு இரண்டு அரிசி எடை சூரணத்தை வெண்ணெய் அல்லது நெய்யில் குழைத்துக் கொடுக்கவும். நாடி ரணம் உலர்ந்து சூடு தணியும், எ-று.

## திராக்ஷப்பழச் சூரணம்

முந்திரிப்பழம், திப்பிலிமூலம், திரிகடுகு, செங்கழுநீர் கிழங்கு, வெட்டிவேர், சந்தனம், இலாமிச்சு, தக்கோலம், அதிமதுரம், முத்தக்காசு, வில்வப்பூ, ஏலம், மல்லி, திரிபலை, நெற்பொரி, பேரீச்சம்பழம், பச்சைகற்பூரம், கற்கண்டு, இலவங்கப்பத்திரி, சிறுநாவற்பூ, குகைநீர் இவைகளை ஓர் நிறையாக எடுத்திடித்து சூரணஞ் செய்துகொண்டு வேளையொன்றுக்கு 7-திரிகடிகைப் பிரமாணம் சாப்பிட்டு வரப் பித்தம், கைகால் எரிவு, வயிறெரிவு, இரத்தபித்தம், சத்தி, கிறுகிறுப்புத் தீரும். பித்தபாண்டு தீரும்; இச்சாபத்தியம்.

## குன்மம் ஆறுக்கும் உப்புச் சூரணம்

உப்புடனேயெருமைமோர் படி-தானென்று
உளவானகுமட்டிச்சாறு படி-தானாகும்
செப்புமொருஇந்துப்பு சவுட்டுஉப்பு
சேரப்பாவெடியுப்பு வளையலுப்பு
தப்பாமல்வகைக்கரிக்கால் ஒன்றாய்ப்போட்டு
தான்காய்ச்சிபூவரசன் குச்சால்கிண்டு
இப்படியேகிண்டிவரச் சர்க்கரையாகும்
இறக்கிவிராகனிடை நீராகாரத்திலுண்ணே.

(இ - ள்.) உப்பு படி-1, எருமை மோர் படி-1, வரிகுமட்டிச்சாறு படி-1, இந்துப்பு, வெடியுப்பு, சவுட்டுப்பு, வளையலுப்பு இவைகள் வகைக்கு பலம்-¼ இதையாவும் ஒன்றாகப் போட்டு அடுப்பேற்றி யெரித்துக்கொண் டிருப்பதுடன் பூவரசன் குச்சியினால் கிளறவும்; சர்க்கரைபோலாகும் சமயத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவும். ஒரு விராகனிடை உப்பு வாயில் போட்டுக்கொண்டு நீராகாரம் சாப்பிடவும். வாய்வு சோகை, காமாலை, எரிவு, கவிசை, கிரிச்சினம், கெண்டை

இவை தீரும். இச்சாபத்தியம். சூன்மம் 6-க்கும் ஓர்வித தகுந்த பிரயோகம் இதுவாகும், எ-று.

## சீரகச் சூரணம்

சீரகத்தை 4-பலம் கொண்டுவந்து இஞ்சிச் சாற்றில் 6-நாள் ஊறவைத்து உலர்த்திக் கொண்டு ஏலம், திரிகடுகு, கோஷ்டம், நெல்லிவற்றல், நெற்பொரி, வில்வப்பழம் இவைகள் வகைக்கு வீசை-2 எடுத்து பொடித்து சூரணமாக்கி அதற்குச் சரி எடையாய் சீனிச்சர்க்கரை கலந்து வேளையொன்றுக்கு திரிகடுகு பிரமாணம் சாப்பிட்டுவர பித்தம் அரோசியம், பித்தவாய்வு, கிறுகிறுப்பு உஷ்ணம், வாய்நாற்றம், வழுவழுப்புத் தீரும். இச்சாபத்தியம்.

## தாளிசப்பத்திரி சூரணம்

தேடப்பாஒருபலம் தாளிசப்பத்திரி
திரிகடுகுதிரிபலாத் யேலங்கிராம்பு
கூடப்பாபத்திரிகை இவைகளெல்லாம்
குணமாகவகைக்குஅரைப் பலமேவாங்கி
நாடப்பாசூரணித்து வைத்துக்கொண்டு
நலமாகசீனிபலம் மூன்றுஞ்சேர்த்து
போடப்பாதிரிகடிகை கொள்ளுகொள்ளு
கல்லடைப்புவெள்வெட்டை நீர்கட்டும்போமே.

(இ - ள்.) தாளிசப்பத்திரி பலம்-1, திரிகடுகு திரிபலாதி, ஏலம், கிராம்பு, பத்திரி வகைக்கு பலம்-½ வாங்கி சூரணித்து சீனிச்சர்க்கரை 3-பலம் கலந்து திரிகடிகை பிரமாணம் சாப்பிட்டுவர மூலக்கடுப்பு, ரத்தக்கடுப்பு, வெள்வெட்டை, நீர்க்கட்டு, கல்லடைப்புத் தீரும் பத்தியமில்லை, எ - று.

## பஞ்ச லவணச் சூரணம்

பஞ்சலவணம், நவாச்சாரம் சத்திச்சாரம், அசுமதாகம்' மரமஞ்சள், திப்பிலி, திப்பிலி மூலம், மஞ்சள். முள்ளிவேர், கண்டங்கத்திரிவேர், கோஷ்டம், மூத்தக்காசு, சிறு தேக்கு, கருஞ்சீரகம், நற்சீரகம், கடுகு, திரிபலை, அத்தி; வாய்விளங்கம், பெருங்காயம், கொடி வேலிவேர், அதிவிடையம், செவியம், பங்கம் பாலைவேர், பெருமரத்துப் பட்டை, வெட்பாலையரிசி இவைகளை ஓர் நிறையாக இடித்துச் சூரணஞ்செய்து, அதற்கு

பாதி சீனி கலந்து நெய்யில் குழைத்து உண்ணவும். அஜீர்ண பேதி, கிராணி, வாயூறல், வாந்தி, சூலை, சீதசுரம், பாண்டு, காமாலை, சுவாசகாசம், க்ஷயம், திமிர்வாய்வு, மூலம் தீரும். இச்சாபத்தியம்.

## இலைக்கள்ளிவேர் சூரணம்

இலைக்கள்ளிவேரின்பட்டை யியல்புடன் உலர்ந்தக்கேளு
கலக்கமொன் றில்லாமல்நீ கருங்கெனசூரணித்து
நிலைக்கவேகாலைமாலை துட்டிடைதேனிலுண்ண
விலக்கவேவாய்விஞேடு விஷமுதல்நீங்கும்பாரே.

(இ - ள்.) இலைக்கள்ளிவேர் பட்டையை உலர்த்தி யிடித்து சூரணித்து வைத்துக்கொண்டு பிரதி தினம் காலை மாலை துட்டிடை யெடுத்து தேனில் குழைத்து உண்ண வாய்வு யாவுந் தீர்வதுடன் எலி முதலான சில விஷங்கள் தீரும் இச்சாபத்தியம், எ - று.

## ராட்சத சூரணம்

இந்துப்பு, பொட்டிலுப்பு, கல்லுப்பு, காரியுப்பு, வெடியுப்பு வகைக்கு விராகனெடை-2½, வாய்விளங்கம் பலம்-1, கருஞ்சீரகம் பலம்-½ ஓமம் பலம்-½, இவைகளை யெல்லாம் இடித்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து நிறுத்து அவ்வெடைக்கு சமனிடையாய் இண்டம்பட்டை சூரணஞ்சேர்த்து வைத்துக் கொண்டு காலையில் திரிகடி சூரணம் எடுத்து தேன், நெய் இதுகளை இரண்டுங் கலந்து குழைத்து சாப்பிடவும். மேகம், உஷ்ணம் இவைகள் தீரும்; பத்தியம்: செங்கீரைத்தண்டு, துவரை, நெத்திலி, இருல் இவைகளாகும், எ - று.

## திப்பிலிச் சூரணம்

திப்பிலியுஞ்சீரகமும் இவைகள்ரெண்டும்
திரமாகவகைக்கு விராகனெடையெட்டாகும்
ஒப்பியோன்றுக உலர்த்திநன்றய்
உத்தமனேதானிடித்து வளவைக்கேளு
தெப்பெனவேவஸ்திரகாயஞ் செய்துகொண்டு
தேடியேதிரிகடிகை தேனிலுண்ணு
அப்போதேபறக்குமடா பெருவீக்கந்தான்
அனுபோகமுறையிதனை யறிந்துவுண்ணே.

(இ - ள்.) திப்பிலி விராகனெடை-8, சீரகம் விராகனெடை-8, இவைகள் இரண்டையும் உலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு திரிகடி தேனில் சாப்பிட பெரும் விக்கம் தீரும். இச்சாபத்தியம், எ-று.

## நிலாவரைச் சூரணம்

நிலாவிரைச்சமூலம், சுக்கு, மிளகு, விளங்கம், ஓமம் வகைக்கு-1 எடுத்து ரவியில் உலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்து அத்துடன் சர்க்கரை சமனெடையாகக் கலந்து திரிகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர வாய்வு, பித்தம், உஷ்ணம், பொருமல் கபம், விக்கல், வாந்தி இவைகள் தீரும்.

## வல்லாரைச் சூரணம்

வல்லாரையை பாலிலவித்து ரவியில் உலர்த்தி வடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணத்தில் பலம்-1, கிராம்பு, ஏலம், ஜாதிக்காய், ஜாபத்திரி, மாசிக்காய், தாளிசப்பத்திரி, திரிபலாதி வகைக்கு பலம்-1, வெதுப்பிப் பொடித்து ஒன்ருய்க் கலந்து சர்க்கரை சமன் கலந்து திரிகடிகை பிரமாணம் நெய்யில் கொள்ள மேகம், காங்கை, மூலச்சூடு, உடம்பெரிவு தீர்ந்து தேகங் குளிரும்.

## சந்தனச் சூரணம்

சந்தனம், கோஷ்டம், நன்னாரிவேர், கடுகுரோகணி, கற்பூரம், சீந்திற் சர்க்கரை, முத்தக்காசு. மஞ்சள், இலுப்பைப்பூ, மூந்திரிப்பழம், மதுரம், பூலாக்கிழங்கு, ஏலம், தாமரைக்கிழங்கு, நெய்தற்கிழங்கு, மரமஞ்சள், விலாமிச்சன்வேர், நெல்லிவற்றல் இவைகளை சூரணித்து அதற்குநிகர் சர்க்கரை கலந்து திரிகடிகை பிரமாணம் வெண்ணெயிலாவது ஆவின் பாலிலாவது கொள்ள சீதம், ரத்தம் விழுதல், வாயால் ரத்தங்கக்கல் முதலான மேகம்-21 தீரும். இச்சாபத்தியம்.

## கொடிவேலிச் சூரணம்

கொடிவேலிவேர், புங்கம்வேர், ஆபிலியப்பட்டை இவைகளை இடித்து சூரணமாக்கி வகைக்கு பலம்-1 கடுக்காய், திப்பிலி, கடுகு, கருஞ்சீரகம் வகைக்குப் பலம்-½ இவைகளை வெதுப்பி சூரணித்து ஒன்ருய் கலந்து வேளை ஒன்றுக்கு திரி

கடிகைப் பிரமாணம் ஒரு மண்டலங்கொள்ள வாதவாய்வு, பித்த வாய்வு தீரும். இச்சாபத்நியம்.

## மதுராதிச் சூரணம்

அதிமதுரம், கோஷ்டம், அக்கிராகாரம், விலாமிச்சுவேர், தக்கோலம், ஏலம், சிறுநாவற்பூ, மல்லி, கிராம்பு, சிறுதேக்கு, மிளகு, திரிபலை, குகைநீர், மூத்தக்காசு, திப்பிலி, லவங்கப்பத்திரி, நன்னாரிவேர், பருத்திவிதைபருப்பு, நெற்பொரி, நற்சீரகம் இவைகள் வகைக்கு விராகனிடை-2, வெதுப்பி பொடித்து தாளிசப்பத்திரி சூரணம் விராகனிடை-4, சீனி பலம் 4-கூட்டித் திரிகடிகை பிரமாணம் சாப்பிட்டுவர பித்தம், அரோசியம், நெஞ்செரிவு கிறுகிறுப்பு வாந்தி தீரும்.

## வஜ்ஜிரவல்லிச் சூரணம்

திரிகடுகு, திரிபலை, கல்லுப்பு, ஏலம், லவங்கம், சித்தரத்தை, திப்பிலிமூலம், கருஞ்சீரகம், நற்சீரகம், பறங்கிப்பட்டை, அக்கிராகாரம், இந்துப்பு, கிராம்பு, ஜாதிக்காய், ஜாபத்திரி, அமுக்குருக்கிழங்கு, வகைக்கு கழஞ்சு-4, கடுகுரோகணி, வெங்காரம், ஓமம், வகைக்கு கழஞ்சு 2, நவாச்சாரம், கல்மதம், வகைக்கு கழஞ்சு-1 இவைகளை இடித்து சூரணஞ்செய்து, அதற்கு நிகர் முற்றின பிரண்டைச் சூரணம் பாதியும், சீனி பாதியுங் கலந்து திரிகடிகைப் பிரமாணம் தேன், நெய், பால் இவைகளில் கொள்ள கபாலவாய்வு, குன்மம், தாகம், கபம், பித்தம், உஷ்ணம், வெட்டை, அபான வாய்வு, மூலவாய்வு தீரும்.

## கூழ்ப்பாண்டச் சூரணம்

ஒரு பெரும் பூசணிக்காயை கீறி முதல் மேற்றோலை நீக்கி அறிந்து பிட்டவியலாக அவித்துபிழிந்து, சட்டியிலிட்டு ஆவின் நெய் தெளித்து, சிவக்க வறுத்து, சூரணத்துடன் கடுக்காய், தான்றிக்காய், திரிகடுகு, அதிமதுரம், ஏலம், லவங்கம், சண்பகப்பூ, கல்மதம், சீரகம் வகைக்கு கழஞ்சு-, வெதுப்பி பொடித்த சூரணத்தையும் ஒன்றாய்க் கலந்து அதற்கு சமனெடை சீனி கலந்து வேளை ஒன்றுக்கு திரிகடிகை பிரமாணங்கொள்ள மேகம், பவுத்திரம், மூலம், மூத்திரப்பாளை, கிரிச்சனம், பெரும்பாடு, வெள்ளைக்கடுப்பு, மேககாங்கை, கல்லடைப்பு, நீரடைப்பு இவைகள் நீங்கும்.

## இங்குலாதிச் சூரணம்

பெருங்காயம், வசம்பு, சுட்டகரி, மாதுளம்வேர், ஓமம், மல்லி, கோஷ்டம், பொன்முசுட்டைவேர், செங்கழுநீர்க் கிழங்கு, கொட்டாங்கரந்தை சமூலம், கொடிவேலிவேர், பஞ்சலவணம், செவியம், ஆனைத்திப்பிலி, திரிகடுகு, சீரகம், வாய்விளங்கம், குரோசாணி ஓமம், கறிவேப்பிலை ஓர் நிறையாக யெடுத்து சூரணித்து, திரிகடிகை பிரமாணம் வெந்நீரில் கொள்ள அக்கினிமந்தம், வாய்நீரூறல், வாந்தி, வெள் ஓக்காளம், விக்கல் தீரும். இச்சாபத்தியம்.

## அக்கினிச் சூரணம்

கொடிவேலிவேர், திரிகடுகு, ஓமம், சிறுதேக்கு, ஆனைத்திப்பிலி, கோஷ்டம், இந்துப்பு வகைக்குப் பலம்-1, காயம் வசம்பு சுட்டகரி வகைக்குப் பலம்-½, கடுகு பலம் ½, ஓர் நிறையாய் சூரணித்து அதற்கு நிகர் சீனி கலந்து, திரிகடிகை பிரமாணம் வெந்நீரில் கொள்ள அஜீர்ணம், மந்தம், பொருமல், கிராணி நீங்கும்.

## மேகச் சூரணம்

வெள்ளாட்டு உதரவழி நீரைப் பிசைந்து வறுத்து இடித்த தூளை வடிகட்டின சூரணம் பலம்-2, குங்குமப்பூ, கோரோசனம், திப்பிலி மூலம், ஓமம் அரத்தை, சீரகம், கிராம்பு, சுத்தி செய்த மனோசிலை, நெற்பொரி, கோஷ்டம் வகைக்கு கழஞ்சி-1 வெதுப்பி புடைத்து, இருவகைச் சூரணத்தையும் ஒன்றாய்க் கலந்து திரிகடிகை பிரமாணம் ஆவின் நெய்யில் மண்டலங் கொள்ள சிலேத்ம நோய் 96-ம் தீரும்.

## நிலவாகைச் சூரணம்

நிலவாகைச் சமூலம், சுக்கு, மிளகு, விளங்கம், ஓமம், வகைக்குப் பலம்-1, ரவியிலுலர்த்தி இடித்து, சர்க்கரை சமன் கலந்து, திரிகடிகை பிரமாணம் சாப்பிட்டு வர வாய்வு, பித்தம், உஷ்ணம், பொருமல், கபம், விக்கல், வாந்தி தீரும்

## இராஜ அமிர்தாதிச் சூரணம்

ஏலம், லவங்கம், அதிமதுரம், நற்சீரகம், மகரப்பூ, குரோசாணி ஓமம், வால்மிளகு, திப்பிலி, வாய்விளங்கம், குங்குமப்பூ,

சடாமாஞ்சி, கடுகுரோகணி, திப்பிலி மூலம், நிலவாகை இவைகளை ஓர் நிறையாய்ச் சூரணஞ் செய்து, அதற்கு நிகர் சீனி கூட்டி திரிகடிகை பிரமாணம் சாப்பிட்டுவர கைகாலுளைச்சல், உள்ளுருக்கி, எலும்புருக்கி, பிரமியம், கரப்பான், மூலமும், வாதபித்தம், உஷ்ணவாய்வு முதலான சகல வாய்வுந் தீரும்; தேகங் குளிரும்.

### பஞ்சலவணச் சூரணம்

பஞ்சலவணம், நவாச்சாரம், சத்திச்சாரம், அசமதாகம், மரமஞ்சள், திப்பிலிமூலம், மஞ்சள், முள்ளிவேர், கண்டங்கத்திரிவேர், கோஷ்டம், முத்தக்காசு, சிறுதேக்கு, கருஞ்சீரகம், நற்சீரகம், கடுகு, திரிபலை, அத்தி, திப்பிலி, வாய்விளங்கம், பெருங்காயம், கொடிவேலிவேர், அதிவிடையம், செவியம், பங்கம்பாளைவேர், பெருமரத்துப்பட்டை, வெட்பாலை யரிசி இவைகளை ஓரெடையா யெடுத்து இடித்துச் சூரணஞ் செய்து, அதற்குப் பாதி சீனி கலந்து நெய்யிற் கொள்ள அஜீர்ண பேதி, கிராணி, வாயூறல், வாந்தி, சூலை, சீத சுரம், பாண்டு, காமாலை, சுவாச காசம், க்ஷயம், திமிர் வாய்வு, மூலம் இவைகள் தீரும்.

### அஸ்வகெந்திச் சூரணம்

ஆவின் பாலில் அவித்துச் சுத்தி செய்த அமுக்குறா வேர் பலம் 1, சுக்கு, ஏலம், குகைநீர், வகைக்குப் பலம்-$1\frac{1}{2}$, கிராம்பு, சிறுநாவற்பூ பலம்- 2, திப்பிலி பலம்-8, மிளகு பலம்-4, இவைகளை இடித்துச் சூரணஞ் செய்து, சீனி பலம்-4 கூட்டித் தேன், இஞ்சிச் சாற்றில் கொள்ள மந்த வாய்வு, வயிற்றுவலி, அரோசியம், வாதபித்தம், உப்புசம், நெஞ்செரிவு, வாந்தி, க்ஷயம், ஈளை இருமல் தீரும்.

ஐந்தாம் பாகம் முற்றிற்று.

---

☞ இனி ஆறும் பாகம் பற்ப வகுப்பு.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(ஆறும் பாகம்)

## பற்ப முறைகள்

### விநாயகர் துதி

விருத்தம்

கூறும்பற்பங் குறைநூலெலாமாய்ந்து
சீறுமேசரக் கானவறுபதும்
தேறநீற்றினஞ் செய்யவேபண்டிதர்
காரமாமுனி கடியவரைந்ததே.

### முகவுரை விருத்தம்

பூரணமாய்திரிகால முணர்ந்தஞானம்
புண்ணியர்தன்னடிபணியுங் கருத்துள்ளோர்க்கு
காரணமாம்வைத்திய திறவுகோலை
காட்டியேயாறும்பாகங் கூறுதற்கு
வாரணமாம்சித்தரொடு பாதம்போற்றி
வரையுமொருபற்பவகை யுலகோர்காண
சேரணமாங்கைமுறையா யெவருஞ்செய்யச்
செஞ்சியேகாம்பரமும் வெளியிட்டேனே.

### நூன்முக விருத்தம்

## வெள்வங்க பற்பம்

வெள்வங்கம்நாலுபலம் எடுத்துக்கொண்டு
அரசம்பட்டைதனையிடித்து வரையக்கேளு
உள்ளபடிகோணிபட்டை யதினில்வைத்து
உத்தமனேவங்கமதை நடுவில்வைத்து

கள்ளமில்லைசுருட்டிமண் சீலைசெய்து
கணக்காய்முப்பதுவறட்டி புடத்தில்வைத்து
தெள்ளவேயரைத்துநெய்யில் தேடியுண்ணு
தீருமொருஇருபத்தோர் மேகம்போமே.

(இ - ள்.) வெள்வெங்கம் 4-பலம் நிறுத்தெடுத்து, அர சம்பட்டையை இடித்து கோணிப்பட்டையில் வைத்து, அதின் நடுவில் வங்கத்தைவைத்துச் சுருட்டி மண்சீலை கவசஞ்செய்து 30-வறட்டியில் புடம்போட்டு எடுத்து கல்வத்தில் அரைத்துச் சீசாவில் வைத்துக்கொள்ளவும். இதை நெய்யில் கொடுக்க மேகம் 21-ம் தீரும். கடுகு, நல்லெண்ணெய், மீன் பூசணிக்காய் ஆகாது, எ - று.

## கர்ப்பூரச் சிலாசத்து பற்பம்

சிலாசத்து பலம்-1, பொட்டிலுப்பு பலம்-1, பொரிகாரம் பலம்-2, இவைகளைச் சுண்ணாம்பு தெளிவுநீரில் அரைத்து 4-நாளானபின்பு எடுத்து 4-பில்லைக்கும் வெவ்வேறாக சீலைமண் செய்து உலர்த்தி 60-வறட்டியில் புடம்போடப் பற்பமாகும். அதை யெடுத்துச் சீசாவில் வைத்துக்கொள்ளவும். வெண் ணெயிலாவது சீரக கியாழத்திலாவது கொடுக்க நீர் உடையும். குளிர்ச்சியான பதார்த்தம் சேர்க்கவும், இச்சா பத்தியம்.

## சீமை கல்நார் பற்பம்

ஐந்துபலங் கல்நாரை யிடித்துடைத்து
அடைத்துமேகுடுவைதனில் பழஞ்சாறுவிட்டு
நிந்தையில்லைசாறுசுண்ட நிழலில்வைத்து
நேராகயிம்முறைசெய் தைந்துநாள்கார்
பிந்தியேமுப்பானெரிவில் புடத்திற்போட்டு
பின்னெடுத்துஅரைத்துநீ வைத்துக்கேளு
தொந்தமாம்வெண்ணெயுடன் நெய்யிலுண்ணு
தொலையுமேமார்நோய்பல் நோயுந்தானே.

(இ - ள்.) கல்நார் 5-பலம் கொண்டுவந்து துண்டு துண் டாக பொடித்து புதுக் குடுவையில் போட்டு எலுமிச்சம்பழம் சாறுவிட்டு நிழலில் ஊறவைத்துச் சுண்டினபிறகு, இதே மாதிரியாய் 5-தரம் ஊறவைத்து எடுத்து 30-வறட்டியால் புடம் போட்டுப் பிறகு கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக்கொள்ள

வும். நெய் அல்லது வெண்ணெயில் கொடுக்க பல்நோய், மார் நோய் இதுகள் தீரும்; சூடு தணியும்; இச்சா பத்தியம் இருக்கவும், எ - று.

## பவள பற்பம்

கெட்டிப்பவளம் 1-பலம் வாங்கி மூசையில்போட்டு, அதின் மேல் வெள்ளைப் பாஷாணம் ½-பலம் பொடித்து பவளத்தின் மேல் போட்டு, செப்புதகடுதட்டி மேல்வாய்மூடி சீலமண் 3-செய்து 5-வறட்டியில் புடம்போடவும். ஆறினபிறகு எடுத்து வெள்ளெருக்கன் பால்விட்டு அரைத்து பில்லைதட்டி காயவைத்து ஓட்டிலிட்டு மேல்மூடி சீலமண்செய்து 10-வறட்டியில் புடம்போட்டெடுத்து கல்வத்தில் பொடித்து வைத்துக்கொண்டு ஸ்திரிகள் பிரசவித்தபோது காணுகிற அசாத்தியமான ஜன்னிக்கு அரிசி எடை தேனில்கொடுக்க நீங்கும். இது சர்வ ஜன்னிக்குமாகும், இச்சாபத்தியம்.

## லிங்க பற்பம்

லிங்கம்பலம்கடலுப் பாமூராக்குங்கொண்டு
நேராகக்கருந்துளசி சாற்றிலாட்டி
லிங்கத்திற்குக்கவசஞ்செய்து சீலைசுத்தி
நவிலும்பத்துவறட்டியிலே புடத்தைப்போட
பொங்கமுடன்பற்பமது வாகுமப்பா
பொல்லாதஜன்னிகுளிர் சுரங்களுக்கு
தங்கவேதேன்சர்க்கரை இஞ்சிசுரசம்
தனிலுண்ணஜன்னிகுளிர் பறக்கும்பாரே.

(இ - ள்.) லிங்கம் 1-பலம் எடுத்து கடலுப்பு ஆமூராக்கு கொண்டுவந்து கருந்துளசி சாறுவிட்டு அரைத்து, மேற்படி லிங்கத்திற்கு கவசஞ்செய்து சீலைசுற்றி காயவைத்து 10-வரட்டியில் புடம்போட்டெடுக்க பற்பமாகும். ஜன்னி தோஷங்களுக்கும் குளிர் சுரங்களுக்கும் கொடுக்கவும். அநுபானம்: இஞ்சி சுரசம், தேன், சர்க்கரை இதுகளாகும், எ - று.

## படிகார பற்பம்

சிறிய மண்குடுவையில் 1-பலம் பசும்வெண்ணெயை இட்டு அதின் மத்தியில் 1-பலம் படிகாரம் ஒரே கட்டியாக அதினடியி லிறங்கச் சொருகிவைத்து வாய்புறம் ஒரு மூடி

சீலை 3-செய்து 5-வறட்டியில் புடம்போடவும்; நீற்று பஸ்பமாயிருக்கும். அதை வெண்ணெயில் மிளகு எடை குழைத்துக் கொடுக்க 3-நாள் 6-வேளையில் வெள்ளை, நீர்க்கடுப்பு இதுகள் நீங்கும். 3-குன்றுமணி எடை முசுமுசுக்கையிலை மூன்றில் பத்தியாய் அடுக்கி மடித்துச் சாப்பிட இருமல் தீரும்: 7-நாள் சாப்பிடவும்; தினம் ஒரு இலை அதிகப்படுத்தவும்.

## பலகறை பற்பம்

பலகறைதான்மூன் றுபலம் நிறுத்தெடுத்து
பக்குவமாய்ப்புதுக்குடுவை தன்னிலிட்டு
நலமாகப்பழஞ்சா றுவிட்டுக் கவசஞ்செய்து
நாட்டியபத்தெருவில் புடத்தைப்போட்டு
வலுவாககல்வத்தில் அரைத்தெடுத்து
வனுபானம்நெய்தேனில் அறிந்துவுண்ண
பலமானபக்கசூலை மார்நோய்வாய்வும்
பதிவிட்டுவோடுமடா பரீக்ஷைபாரே.

(இ - ள்.) பலகறை 3-பலம் வாங்கிப் புதிய குடுவையில் போட்டு எலுமிச்சம்பழம் சாறுவிட்டு கவசஞ்செய்து, 10-வறட்டியில் புடம்போட்டு எடுத்து கல்வத்திலரைத்து வைத்துக்கொள்ளவும். இதை நெய்யில், தேனில் கொடுக்கப் பக்கசூலை மார்நோய், வாய்வு நீங்கும்; கடுகு, நல்லெண்ணெய், மீன் ஆகாது, எ - று.

## தங்க பற்பம்

தங்கரேக்கை முள்ளுக்கீரை சாற்றில் மூன்றுநாள் ஊற வைத்து ரவியிற்காயவைத்துக் கல்வத்திலிட்டு, சித்திரைப் பாலாடைச்சாற்றில் மைபோல் அரைத்து அகலில்வைத்து மூடி 7-சீலைமண்செய்து 100-வறட்டியில் புடம்போட பற்பமாகும். சவுரியிலைசாறு படி-8 சிறுக சிறுக ஒரு சட்டியில் விட்டுக் காயவைத்து திரட்டி நிறுத்து அந்த இடைக்கு ஆடு தொடாயிலையும், 1-பலம் புனுகும், 2-கழஞ்சு மேற்படி பற்பமும் சேர்த்து மெழுகுபோல் அரைத்து நெல்லிக்காய்போல் உருட்டி எள்ளெண்ணெயில் போட்டு அந்தி சந்தி ஒவ்வொரு உருண்டை வீதம் 6-மாதம் சாப்பிட்டு மேற்படி எண்ணெயை வார்த்து இரண்டுமுறை ஸ்நானஞ்செய்து போகம்நீக்க, மாமிச

பதார்த்தமும் தள்ளிவைக்க வெண்குஷ்டம் முதலான சகல குஷ்டமும் தீரும்.

## ரச பற்பம்

கொள்ளப்பாரசமோதான் விராகனொன்றை
கூட்டியேசிவகரந்தைச் சாற்றிலாட்டி
விள்ளவேபில்லைசெய்து ஒட்டில்வைத்து
வேண்டியேமூன்றுமண் சீலைசெய்து
கள்ளமில்லைகோழிபுடம் போடநிற்கும்
கண்மணியேபனைவெல்லந் தன்னிலுண்ண
துள்ளுமொருகிரந்திமேகம் வெள்ளைதீரும்
துணையாகயிச்சாபத்திய மிருந்துபாரே.

(இ - ள்.) ரசம் 2½-விராகனிடை எடுத்து சிவகரந்தைச் சாற்றில் அரைத்து பில்லைசெய்து ரவியிலுலர்த்தி ஓட்டில் வைத்து மேல் ஓடு மூடி 3-சீலைமண்செய்து கோழிபுடம் போட தீரும். இதை பனைவெல்லத்தில் கொடுக்கக் கிரந்தி, மேகம், வெள்ளை தீரும்; இச்சாபத்தியம், எ - று.

## வெள்ளீய பற்பம்

வெள்ளீயம் 1-பலம் கொண்டுவந்து இலைபோல் தகடு தட்டி நூலைப்போல் சன்னப் பொடிகளாகத் தரித்து வைத்துக்கொண்டு, புதிய சடைக்கஞ்சா 1-பலம் கொண்டுவந்து நெகிழ அரைத்து ஒரு வட்டமான ஓட்டுபில்லையில் பாதி வைத்து அதின்மேல் கத்திரித்த பொடிகளைப் பரப்பி மேலே அரைத்த பில்லையை வைத்து மேலோடுமூடி சீலைமண் 3-செய்து 30-வறட்டியில் புடமிட்டு எடுக்கவும் பற்பமாகும். மேகங்களுக்கு வெண்ணெய், நெய்யில் பிரயோகப்படுத்தலாம். இச்சாபத்தியம்.

## மான்கோம்பு பற்பம்

மான்கொம்பு ½-வீசை வாங்கித் துண்டு துண்டாக நறுக்கி உடைத்து இதையும் அகத்திக்கீரையையும் பெரிய பானையில் போட்டு 1-ஜாமம் வேகவைத்து யெடுத்து பிறகு நீர்முள்ளி யிலையை அரைத்து மேல் கவசஞ்செய்து சீலைமூடி 50-கை வறட்டியில் புடம்போடப் பஸ்பமாகும். கல்வத்தில் அரைத்து வைத்துக் கொள்ளவும். நெய்யில் கொடுக்க மார்நோய், இடுப்பு

நோய், நாவறட்சி, வெள்ளை, மேகம் இதுகள் தீரும். இச்சா பத்தியம்.

## நாக பற்பம்

நாகத்தை 1-பலம் கொண்டுவந்து இலுப்பை நெய்யில் இருபது தடவை உருக்கி காய்த்து சுத்திசெய்து ½-பலம் நாகத்தை உருக்கும்போது கண்விட்டு ஆடையில் சிற்றாமணக்கு இலையைக் கசக்கி 5-அல்லது 6-துளி பிழியச் சத்தமிடும். மறுபடியும் 5-6-துளி பிழியச் சத்தமடங்கும். துருத்தியை விசையாயூதி மறுபடியும் 5-6-துளி பிழிந்து சிற்றாமணக்கன் வேரால் கிண்டிவர மல்லிகைபூவைப்போல் நீறும். அதை அனுபானங்களிலிட வெள்ளை, வெட்டை, சிலேத்மம், குன்மம், மூலம் இதுகள் நீங்கும். தாதுவிர்த்தி யுண்டாம்.

## ஆமையோடு பற்பம்

ஆமையோட்டை நறுக்கிப் பச்சைகோரைக்கிழங்கை அரைத்து அதின்மேல் பூசி கவசஞ்செய்து உலர்த்தி 50-வறட்டியில் புடம்வைக்க பஸ்பமாகும். நெய்யில் கொடுக்க பசிதீபனமுண்டாகும், அஜீர்ணம் நீங்கும், இச்சா பத்தியம்.

## தங்க பற்பம்

தங்கரேக்கு விராகனெடை-½, சுத்திசெய்த சித்தண்டையோடு விராகனெடை-1, இவ்விரண்டையும் அரைத்து உத்தாமணிப் பால் 5-துளிவிட்டு பிசறி மூசையிலிட்டு ஓடுமூடி சீலசெய்து ஒரு குண்டுசட்டியில் உமிகொட்டி அதின் மத்தியில் வைத்து தீயிடப் பற்பமாகும். காசரோகத்திற்கும் அதிக கொழுமையினல் அடைந்த தாது சோர்வை நீக்கும்.

## தாளக பற்பம்

ஒரு பலம் தாளகத்தைப் பொடியாய் இடித்து ஒரு கலயத்திலிட்டு எருக்கன்பால் தளரவிட்டு ஒரு நாள் சூரியபுடம் வைத்து எடுத்து மேலோடுமூடி சீலமண்செய்து 20-வறட்டியில் புடம் போடவும் பற்பமாகும். தேனில் அரிசி எடை கொடுக்கக் காய்ச்சல் இருமல் தீரும். அயப்பொடியும் இப்படியே செய்து கொள்ளவும்.

## வெள்ளிபற்ப செந்தூரம்

சரிகைவெள்ளியை லேசாகதட்டி பழுக்கக்காய்ச்சி பழு பாகல் கிழங்குச் சாற்றில் 7-தரம் தோய்த்து மூசையில் வைத்து உருக்கி கண்விட்டாடும்போது மகிழம்பூ சாற்றைச் சிறுகவிட்டு ஊதப் பொடியாய் போகும். அதை மேற்படி சாற்றுலாட்டிப் பில்லைதட்டி காயவைத்து முக்காவேளை வேரை மேற்படி சாற்றுலாட்டி மூசையில் வைத்து மூடி 7-சீலை மண்செய்து 100-வறட்டியில் புடம்போட நீரும். அதில் பண வெடை திப்பிலி லேகியத்தில் கொள்ள சிலேத்துமம் 96-ம் சூலை தீரும்.

## கைகாலில் பித்தவெடிகண்டால் மருந்து

மருதம் இலையை ஒருபிடி கொண்டுவந்து பசும்பால் விட்டரைத்து புன்னைக்காயளவு எடுத்து ¼-படி பசும்பாலில் கரைத்துப் போஜனம் செய்த பிறகு சாப்பிடவும். 35-நாள் சாப்பிட சொஸ்தப்படும்.

## நீரில் இரத்தங்கண்டால் மருந்து

பச்சரிசி, விராலியிலை இரண்டும் சமன் கொண்டு எருமைப் பால் விட்டரைத்து புன்னைக்காயளவு எடுத்துத் தேற்றான்வித்து சூரணம் கழற்சிக்காயளவு கலந்து பிசைந்து இருவேளையும் 3-நாள் சாப்பிடவும்.

## பிள்ளை பெற்றவர்களுக்கு சீஉதிரங் கட்டினால் மருந்து

வாழைமரத்தின் குருத்தைக் கொண்டுவந்து சுட்டு சாம்பலாக்கி, பனைவெட்டு சமன்போட்டு பிசைந்து பாக்களவாக இருவேளையும் சாப்பிட 3, 4-விசை மலமுங் கழியும்; வியாதியும் தீரும்.

## பிள்ளைகள் பல்லில் இரத்தம் வடிதலுக்கு மருந்து

பச்சை நன்னாரிவேரைக் கொண்டுவந்து வெந்நீர் விட்டரைத்துக் கொட்டைப்பாக்களவு கொடுக்கவும். 1-நாளைக்கு மூன்று விசையாக காலை, உச்சி, மாலை இப்படி நிற்கிறவரையில் கொடுக்கவும்.

## சதையடைப்புக்கு மருந்து

முற்றின கோழியின் குடலிலிருக்கும் சிறு கல்லும் வெள்ளரி யிலையும், பூநாகமும், வெல்லமும் வகைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்தரைத்து ஆவின்பாலில் கலக்கிக்கொடுக்கத் தீரும்; இப்படி ஆறுநாள் கொடுக்கவும்.

## கல்லடைப்புக்கு மருந்து

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முள்ளிலவம் | 1 | பலம் | சிந்தில் | 1 | பலம் |
| பூலா | 1 | ,, | சித்தாமுட்டி | 1 | ,, |
| முத்தக்காசு | 1 | ,, | செங்கழுநீர் | 1 | ,, |
| முல்லை | 1 | ,, | விராலி | 1 | ,, |
| செந்தாமரை | 1 | ,, | விலாமிச்சம்வேர் | 1 | ,, |
| நாவல் கொழுந்து | 1 | ,, | சிறுகீரை | 1 | ,, |
| வெட்பூலா | 1 | ,, | வெட்டிவேர் | 1 | ,, |
| நன்னாரி | 1 | ,, | பொன்னுங்கண்ணி | 1 | ,, |

4-படி இளநீரில் போட்டு ½-படி கியாழமாய் வற்றக் காய்ச்சி வடிகட்டிக் கொடுக்கத் தீரும்.

## உஷ்ணபேதிக்குக் கரியுப்பு

கரியுப்பு 1¼-பலம், துத்திவேர்ப்பட்டை 7-பலம், அதின் சமூலம் 3-பலம்.

இதுகளைக் கொண்டுவந்து வேர்பட்டையும் வெவ்வேருக உரலிலிட்டு இடித்து, பிறகு விளாங்காய் பிரமாணம் மண் குடுவை கொண்டுவந்து இடித்த வேரையும், இலையையும் ஐந்து பாகமாக்கி ஒரு பாகம் வேரில் பாதி குடுவையில்போட்டு, பிறகு உப்பை மத்தியில் வைத்து அதின்மேல் இலையையும் போட்டு, குடுவைமேல் ஒரு ஓட்டு பில்லை மூடி சீலையில் மண் கவசம்செய்து கோழிப்புடம் போடவும். இப்படி ஐந்து புடம் போட்டு எடுத்து கல்வத்திலிட்டு அரைத்து புட்டியில் போட்டு வைத்துக்கொள்ளவும். சாப்பிடுகிறதற்கு 1-விராகனிடை எடுத்து அப்பட்டமான தேனில் குழைத்துக் காலை, மாலை 5-நாள் சாப்பிடவும் தீரும். வியாதி: மேகவாய்வு, உஷ்ணவாய்வு, கைகால் பிடிப்பு, அஜீர்ணம், பித்தம் இவை முதலானதும் தீரும்; பத்தியம்: நல்லெண்ணெய், கடுகு, கொள்ளுப்பருப்பு, அகத்திக்கீரை, பூசணிக்காய், லாகிரி இதுகள் கூடாவாம்.

## மதன சஞ்சீவி நெய்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திரிகடுகு | 4 | கழஞ்சு | சிறுநாவற்பூ | 4 | கழஞ்சு |
| கிராம்பு | 4 | ,, | பத்திரி | 4 | ,, |
| வால்மிளகு | 4 | ,, | சீரகம் | 4 | ,, |
| தக்கோலம் | 4 | ,, | | | |
| கோரக்கர்மூலி | 5 | ,, | அபினி | 5 | ,, |

இவைகளை ஆவின்பாலிலரைத்து ¾-படி நெய்யில் வேக வைத்து நெய்யை வடிகட்டிக்கொண்டு, ஒரு கரண்டி நெய் சாப்பிடவும். புளியைத்தள்ளி பால்சாதம் சாப்பிட்டு சுகித்தால் இன்பங்கொடுக்கும்.

## மேகவாய்வுக்கு பற்பம்

சொக்க வெள்ளியாவது ரூபா வெள்ளியாவது ¼-ரூபா இவையெடுத்து ஈனுத வாழைமரத்தடியில் சொருகிவைத்து 15-நாள் பொறுத்து போய்பார்த்தால் சொருகிவைத்த வெள்ளியின்மேல் முட்டை முட்டையாக கிளம்பியிருக்கும். இதைக் கொண்டுவந்து குப்பைமேனிச்சாறுவிட்டு அரைத்து பில்லை தட்டி வெய்யிலில் வைத்து காய்ந்தபிறகு மண் அகல் 2-கொண்டுவந்து 1-அகலில் பில்லையை வைத்து மேலே 1-அகலைமூடி சீலையில் மண்பூசி கவசம்செய்து, 10-கைவறட்டியில் புடம்போடவும் சுன்னமாகும். அதைக் கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக்கொண்டு, வேளையொன்றுக்கு அரிசி எடை பசும்வெண்ணெயில் குழைத்துக் காலை, மாலை 5-நாள் சாப்பிடவும். அரையாப்பு, கொறுக்கு, கைகால் பிடிப்புடன் இருபத்தோர் மேகமும் தீரும்; இச்சாபத்தியம்.

ஆறம் பாகம் முற்றிற்று.

---

☞ இனி ஏழாம் பாகம் செந்தூர வகுப்பு.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(ஏழாம் பாகம்)

## செந்தூரவகுப்பு, மெழுகுவகுப்பு

விநாயகர் துதி

விருத்தம்

அந்தமாய் பதினெண்பேர் நூலாய்ந்துமே
செந்தூரவகை செப்பிடப் புவியினில்
தொந்தமாய்ப் பல்லோர்கள் களித்திட
தந்திமாமுகன் தாளிணை போற்றுவாம்.

### முகவுரை விருத்தம்

எத்தனைதான்வாகடங்கள் படித்தபோதும்
எண்ணியேவித்தைகளைக் கற்றபோதும்
சுத்தமுடன்உணர்வதற்கு குருதான்வேண்டும்
தொண்டுசெய்துஅடுத்தாலும் மருமம்விள்ளார்;
சித்தியுள்ளவைத்திய திறவுகோலில்
திரையொன்றுமில்லாமல் திறந்துநன்ருய்
இத்தரைமேலனைவோர்க்கும் வேணுமென்று
இயம்பினேன்செஞ்சியே காம்பரந்தானே.

### நூன்முக விருத்தம்

ராமபாண செந்தூரம்

ரசம்பூரம்லிங்கம்வீரம் ரசசெந்தூரம்
நெல்லிகெந்தகமிவைவகைக்கு கழஞ்சிதூக்கு.
வசமாகமுலைப்பால்விட்டு நாலுஜாமம்
அரைத்துரவிதனில்வைக்கச் செந்தூரமாகும்.

இசைவாகயெடுத்துக்கொண்டு பனைவெல்லத்தில்
ஈந்திடுவாயரிசிஎடை யிச்சாபத்தியம்
விசையான நீரேற்றம் மேகஞ்சன்னி
வாய்வுவீக்கசுரமதுவும் வாங்கும்பாரே.

(இ - ள்.) வீரம், பூரம், ரசசெந்தூரம், லிங்கம், நெல்லிகெந்தகம் இவைகள் வகைக்கு கழஞ்சுவீதம் எடுத்து முலைப்பாலில் 4-ஜாமம் அரைத்து வெய்யிலில் வைத்தால் செந்தூரமாகும். எடுத்துக் கொண்டு பனைவெல்லத்தில் அரிசி எடை கொடுக்கவும். இச்சாபத்தியம். வாய்வு, வீக்கம், சுரம், மேகம், ஜன்னி, நீரேற்றம் இவைகள் நீங்கும், எ - று.

## அன்னபேதி செந்தூரம்

அன்னபேதி 10-விராகனெடை வாங்கிப் புளிச்சத் தண்ணீரில் வேகவைத்து கல்வத்திலிட்டு 5-எலுமிச்சம்பழம் ரசம் விட்டரைத்துப் பில்லைசெய்து உலரவைத்து ஓட்டில் வைத்து மேலோடுமூடி ஒரு சீலைமண் செய்து 10-வறட்டியில் புடம் போட்டெடுத்து இதைத் தேனிலிட மேகவாய்வு, மார்புநோய் நீங்கும்; பசியுண்டாகும்.

## லிங்க செந்தூரம்

சேரப்பாலிங்கம்பலம் நிறுத்தெடுத்து
சித்திரமூலம்வேர்பட்டை தனையறுத்து
சேரப்பாலிங்கமுடன் கவசஞ்செய்து
சீலைமண்செய்துபத்து வறட்டியாலே
சேரப்பாபுடம்போடச் செந்தூரமாகும்
சிக்கெனவேஅரிசிஎடை தேனிலுண்ணு
சேரப்பாவாய்வெல்லாம் பறந்துபோகும்
சிராகஇச்சாபத்திய மிருந்துபாரே.

(இ - ள்.) முதல்தரமான லிங்கம் 1-பலம் நிறுத்தெடுத்து சித்திரமூலம் வேர்பட்டையைக் கொண்டுவந்து அரைத்து ஷை லிங்கத்திற்குக் கவசங்கட்டி சீலைமண்செய்து பத்து வறட்டியால் புடம்போட்டு ஆறியபின் எடுக்கச் செந்தூரமாகும். தேனிலாவது இஞ்சி ரசத்திலாவது அரிசி எடை கொடுக்கவும். சகல வாய்வுகளையும் கண்டிக்கும், எ - று.

## திரிலோக செந்தூரம்

அயப்பொடி பலம்-1, கெந்தி பலம்-2, தங்கப்பொடி விராகனெடை-½, வெள்ளிப்பொடி விராகனெடை-1 இவை களை கல்வத்திலிட்டுக் கல்சுண்ணாம்புச் சாரமும் சமனாகக்கூட்டி நல்ல ஜலத்தில் கரைத்துத் தெளிவுநீரை யெடுத்து அந்த நீரி னால் ஷை சரக்கை 4-ஜாமம் அரைத்து உலர்த்தி புதுவோட்டி லிட்டு அடுப்பேற்றி லேசாக வறுக்கும்போது சிவந்து வரும் பதத்தில் எடுத்துக்கொண்டு தேனில் பணவிடை கொடுத்துக் கொண்டு வர சோகை, வெளிறு, ஊதல், நீரேற்றம், பசிமந் தம், வாய்வு இவைகள் தீர்ந்து ரத்தவிர்த்தியாகும்.

## பால செந்தூரம்

சிறியதோர்குடுவைதனில் நெல்லிகெந்தி
சீராகக்கால்பலந்தான் உள்ளேவைத்து
அறியவேபாலைரசங் கீழ்மேலூற்றி
தெரியவேமூன்றெருவில் புடத்தைப்போட்டு
தெளிவாகஅரிசிஎடை தேனிலுண்ணு
நிறையானவாய்வுசுரங் காணாதோடும்
நேராகும்அநுபோக முறையிதாகும்.

(இ - ள்.) சிறிய குடுவையில் ¼-பலம் நெல்லிக்காய் கெந் தியை 1-பலம் பாலைரசத்துக்கு கீழ்மேலுமிட்டு ஓடுமூடி சீலை செய்து 3-எருவில் புடமிட்டு எடுக்கவும், அரிசியெடை தேனி லிட வாய்வு சுரம் தீரும். இச்சாபத்தியம், எ - று.

## கரிவுப்பு செந்தூரம்

கரியுப்பை எருக்கன்பால், திருகுகள்ளிப்பால், தும்பை, கவுரிதும்பை, மருதம்பட்டை, குமரி, எலுமிச்சம்பழம், பொடு தலை இவைகளின் சாற்றில் வகைக்கு 2-புடம்போடச் செந் தூரமாகும். அதை மூன்று பண எடை தேனிற் கொடுக்கக் குன்மம், உதிரரோகம், க்ஷயம், சூலை, வீக்கம், வாய்வு, கிராணி முதலானவை தீரும்.

## பூரணி செந்தூரம்

பூங்காவிபடிகாரம் இவைகள்ரெண்டு
புண்ணியனேவிராகனெடை வகைக்குரெண்டு

ஓங்கியேயரைத்துவெண்ணெய் தன்னிலுண்ணு
ஓடுமொருவியாதிகளை யுரைக்கக்கேளு
நீங்குமேபசிமைவெள்ளை ரத்தகாசம்
மேகவெட்டைவுள்காய்ச்சல் உஷ்ணவாய்வு
வாங்குமேநாவறட்சி இச்சாபத்தியம்
வரையுமொருகடுகுநல் லெண்ணெய்நீக்கே.

(இ - ள்.) பூங்காவி விராகனெடை-2, படிகாரம் விராகனெடை-2 இவைகளை கல்வத்தி லரைத்து, வெண்ணெய் அல்லது நெய்யில் சாப்பிடவும். பெரும்பாடு, வெள்ளை, பசிமை, ரத்தகாசம், மேகவெட்டை, உள்காய்ச்சல், உஷ்ணவாய்வு, நாக்கு வறட்சி இதுகள் தீரும், இச்சாபத்தியம். கடுகு, நல்லெண்ணெய் நீக்கவும், எ - று.

## சண்டமார்த்தாண்ட செந்தூரம்

பூரம் விராகனெடை-10, லிங்கம் விராகனெடை-8, ரச செந்தூரம் விராகனெடை-2, நெல்லிக்காய் கெந்தகம் விராகனெடை-1 இவைகளைக் கல்வத்திலிட்டு முலைப்பால் விட்டு 8-ஜாமம் அரைத்துக் கோழிமுட்டை வெள்ளையம்பிலியால் 8-நாள் அரைத்துப் பில்லைசெய்து நிழலிலுலர்த்தி நல்ல ஜலம் 1 படி கொதிக்கக் காய்ச்சி, அதில் இந்த பில்லையைப் போட்டுச் சூடு ஆறினபிறகு எடுத்து உலர்த்திக் கல்வத்தில் அரைக்கச் செந்தூரமாகும். அரிசி பிரமாணம் தேனில் கொடுக்க பாரிசவாய்வு, ஜன்னி தீரும். கடுகு, நல்லெண்ணெய், தயிர், பால் ஆகாது.

## காளமேக செந்தூரம்

பாரப்பாவிராகனெடை ரசந்தானு று
பக்குவமாந்தாளகம் கெந்தி லிங்கம்
சேரப்பாவகைக்கு விராகனென்று
சேர்த்துமேகுமரிச்சாற்றில் ஜாமமாட்டி
வாரப்பாபழஞ்சாற்றில் ஜாமமாட்டி
அரைத்துமேபில்லைதட்டிக் காயவைத்து
காரப்பா அகல்தனிலே மண்சீலைசெய்து
கணக்காவைந்தெருவில்புடஞ் செந்தூரமாமே.

(இ - ள்.) இரசம் விராகனெடை-6, தாளகம், கெந்தி, லிங்கம் இவை மூன்றும் வகைக்கு 1-விராகனெடையாகக்

கொண்டு கல்வத்தில் இட்டு குமரிச்சாறுவிட்டு ஒரு ஜாமமரைத்துப் பழச்சாறுவிட்டு ஒரு ஜாமம் அரைத்து பில்லைத்தட்டி காயவைத்து அகலில் வைத்து மேலோடுமூடி சீலைமண் 3-செய்து 5-எருவில் புடம்போடச் செந்தூரமாகும். அனுபானம்: நெய், தேன், வெண்ணெய் இதுகளில் பணவெடை கொடுக்கத் தந்திமேகம், மதுமேகம், சுக்கிலமேகம், கண்டமாலை இதுகள் தீரும். வயிற்று நோயிற்குச் சர்க்கரையில் கொடுக்கவும். புளி தள்ளவேண்டியது. நோய் நிடமரிந்து 3-நாள் அல்லது 5-நாள் கொடுக்கவும்.

## பஞ்சலோக செந்தூரம்

தங்கம், வெள்ளி, காந்தம், இரும்பு, செம்பு இவைகளை ஓர் நிரையாகச் சுத்திச்செய்து அதற்கு 2-பங்கு கெந்தகம், சூதம் ½-பங்கு வீரம் ¼-பங்கு கூட்டி முப்புச்சுண்ணம் கழஞ்சு-1, எலுமிச்சம்பழச்சாற்றிலும் கரிச்சாற்றிலும் வகைக்கு 4-ஜாமமரைத்து முழுப்புடம் போடச் செந்தூரமாகும் அதில் பண எடை திரிகடுகு செந்தூரத்தில் வைத்துத் தேன்விட்டு மத்தித்து மண்டலங்கொள்ள வாய்வு-80, பித்தம், மூலம், சிலேத்மம் நீங்கும்.

## சண்டமாருத செந்தூரம்

லிங்கம், பூரம் வகைக்கு விராகனெடை-10, வீரம் விராகனெடை-2, கெந்தி விராகனெடை-1 ரசசெந்தூரம் விராகனெடை-1 இவைகளைக் கல்வத்திலிட்டு 2-ஜாமம் உரைத்துப் புட்டியில் வைத்துக்கொள்ளவும். பனைவெல்லத்தில் செந்தூரம் வைத்துச் சாப்பிடவும். 57-நாள் கொள்ளவும். இச்சாபத்தியம். ஜன்னி-10, வாதம்-80, பீலிபவுத்திரம், தனுர் வாதம், விரைவாதம், முக்கல், கடுக்கல் கிரந்திப்புண், வெடி சூலை, கண்டமாலை, பெரும்பாடு, அரையாப்பு, சிலந்தி எவ்விதச் சுரமும் தீரும்.

## பஞ்சபாண செந்தூரம்

சூரத்துகற்பூரம், ஜாதிலிங்கம், மனோசிலை, தாளகம், காந்தம், ரசம் சங்குபாஷாணம், கெந்தகம் இவைகள் வகைக்கு 1-பலம் வாங்கிக் கல்வத்திலிட்டு மேனிச்சாற்றினால் 3-ஜாமம் அரைத்து அப்படியே நிழலிலாரவைத்து மறுநாள் கருப்பு

வெற்றிலைச்சாற்றால், செம்பருத்திச் சாற்றால், வெள்ளருகுசாற்றால், துளசிசாற்றால், வேலிபருத்தி சாற்றால், பொடுதலைசாற்றாலும் ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு சாற்றால் 4-ஜாமம் குறையாமல் அரைத்து, ஒரு சட்டியில் கம்மாறு வெற்றிலை பரப்பி அரைத்த மருந்தை பில்லைதட்டி அதன்மேல்வைத்து மேல்மூடி சீலைமண் 7-செய்து அடுப்பிலேற்றி ஒரேஜாதிவிறகால் 4-ஜாமம் எரிக்கவும், அடிசட்டி சிவக்கக்கண்டால் தீயைவாங்கிக் கமலம் போல் எரிக்கவும். இப்படி ஒரு நாழிகை யெறித்தபின் இரக்கி ஆறின பிறகு எடுக்கச் செந்தூரமாகும் புட்டியில் வைத்துக் கொள்ளவும். இஞ்சி, தேன் இவைகளில் 2-அரிசி எடை கொடுக்கவும்.

சுரம்-64, ஜன்னி-13, குட்டம்-17, கிரந்தி தலைசாய்ந்த வாய்வு-29, வாதம்-80, மேகம்-21, குன்மம்-8, கிராணி-6, மூடக்குசூலை, வெடிசூலை, கன்னப்புற்று, யோனிப்புற்று, அண்டப்புற்று, கபாலசூட்டம், கண்டமாலை, கொடைவாழை, அழுகண்ணி, அரையாப்பு, கபாலகுத்தல், கண்ணோய், பவுத்திரம், பிளவைரிணம், மூலம், காசிரோகம், இடுப்புசூலை இவையெல்லாம் தீரும். இச்சாபத்தியம். நோயின் திடமறிந்து 57-நாள் கொடுக்கவும். மறுபத்தியம் அப்படியே காக்கவும்; பிறகு ஸ்நானம் செய்விக்கவும்.

## தாம்பிர செந்தூரம்

சல்லிகாசியை காய்ச்சி இலைபோல் தகடுகளாகத்தட்டி சிவக்கக் காய்ச்சி எலுமிச்சம்பழ ரசத்தினுல் 14-தடவை காய்ச்சிக் காய்ச்சித் தோய்க்கவும். தோய்த்த பிறகு அகத்திக் கீரையை அரைத்து உண்டைசெய்து தகட்டை முத்தைக்குள் சொருகிச் சன்னபோலிப் பட்டையைச் சேற்றில் புரட்டிக் கவசஞ்செய்து இரண்டுமுழ ஆழம் அகல நிகளமுள்ள கெஜ புடத்தில் 100-கை வறட்டியில் புடம்போடவும். நான்கு நாளான பிறகு எடுத்துக் கல்வத்திலிட்டு எருக்கன்பால் விட்டரைத்துப் பில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடி சீலைகவசம்செய்து 50-கை வறட்டியில் புடம் வைக்கவும். மறுநாள் எடுத்துப் பார்க்க ஊதா செந்தூரமாக இருக்கும். அதைக் கல்வத்திலிட்டு அரைத்துப் புட்டியில் வைத்துக்கொள்ளவும். அனுபானம்: ¼-படி புளித்த

தண்ணீர் 2-பலம் மிளகுபோட்டு 3-நாள் ஊறவைத்து நாலா நாள் எடுத்து வெய்யிலில் உலர்த்திச் சூரணம் செய்து நெய் பழகிய சட்டியில் தேன், இஞ்சிரசம், பசும்நெய் வகைக்கு 1-ரூபாயெடை சட்டியில் விட்டு மிளகு சூரணத்தைக் கொட்டி லேகியமாய் கிளறி வைக்கவும். புளியங்கொட்டைப் பிரமாணம் லேகியத்தில் அரிசி எடை செந்தூரம் வைத்துச் சாப்பிடவும், வாதசுரம், மேகவாய்வு, கண்டமாலை, கிரந்தி தீரும். இச்சா பத்தியம்.

செந்தூர வதப்பு முற்றிற்று.

---

# மெழுகின் முறைகள்

## ஒற்றை விரைவாதத்திற்கு மெழுகு

### விருத்தம்

லிங்கமதுவிராகனெடை ஒன்றேகால்தான்
விதமாகமிளகுதான் பலந்தான்ஒன்று
இன்பமுடன்கழஞ்சியொன்று பூரம்வாங்கு
இசையவேதேன்விட்டு ஒருஜாமந்தான்
குன்றிமணிமெழுகுபோல் அரைத்தெடுத்து
குறையாமல்தூதளங்காய்ப் பிரமாணந்தான்
விந்தையாய்இருவேளைச் சாப்பிடத்தான்
வேண்டாதேவாய்வுள்ள பதார்த்தந்தானே.

(இ - ள்.) லிங்கம் விராகனெடை-1¼, மிளகு பலம்-1, பூரம் கழஞ்சி பலம்-1, இவை மூன்றையுந் தேன்விட்டு ஒருஜாமமரைத்து மெழுகு பதத்தில் வைத்துக் கொள்ளவும். தூதளங்காய்ப் பிரமாணம் இருவேளை சாப்பிடவும், வாய்வு பதார்த்தமாகாது; இச்சாபத்தியம், எ - று.

## வீரமெழுகு

சுக்கு, திப்பிலி, மிளகு, லிங்கம், வீரம், பூரம் வகைக்கு 2-விராகனெடை எடுத்துத் தேன்விட்டரைத்து பரணியில் வைக்கவும். அனுபானம்: கடலைப் பிரமாணம் சீனியில் கொடுக்க பேதியாகும். பேதி அதிகப்பட்டால் மோர்சாதம்

கொடுக்கவும், இஞ்சிரசத்தில் தேனில் கொடுக்க, வாதத்தைக் கேட்கும்; அன்று சாயந்திரம் மிளகு, சுக்குக் கியாழமிட்டுச் சாப்பிடவும்.

## சூதகவாய்விற்கு மெழுகு

வீரம், பூரம், சாரம், படிகாரம் வகைக்கு ¼-பலமாக நிறுத்து எடுத்துக் கல்வத்திலிட் டரைத்து, கோழிமுட்டை நாலுடைத்து, மேல்தோல் போக்கி, அம்பிலி சமூலம் ஊற்றவும். எலுமிச்சம் பழம் பதினைந்து அறுத்து விதை நீக்கி சாறுபிழிந்து சூரிய புடம் வைத்துச் சுண்டினபிறகெடுத்து அரைத்து வைத்துக் கொள்ளவும், அனுபானம், 1-வேளைக்கு மிளகுப் பிரமாணமாக 3-நாள் 2-வேளை சாப்பிடவும்; இச்சாபத்தியம்.

## கோரோஜன மெழுகு

லிங்கம், பூரம் சுத்திசெய்த வாளம், லவங்கம் விராகனெடை-2½, வீரம், கோரோஜனம், கரிமஞ்சள், ஏலரிசி, சுக்கு, வகைக்கு விராகனெடை-1 இவையெல்லாம் சூரணிப்பதைச் சூரணஞ் செய்யவும்; சுத்தி செய்வதைச் சுத்திசெய்யவும். இவையெல்லாம் கல்வத்திலிட்டு 12-பலம் பனைவெல்லங்கூட்டி அரைத்தெடுக்கவும். உளுந்துப் பிரமாணம் கருப்பன்கட்டியில் கொடுக்க இரைப்பு, உப்புசம், வீக்கம், சகலமான வாய்வுந் தீரும்.

## கஸ்தூரி மெழுகு

கோரோஜனை, குங்குமப்பூ, மலர் நீக்கிய லவங்கம், வால் மிளகு வகைக்கு விராகனெடை-4, புனுகு, சவ்வாது வகைக்கு விராகனெடை-¼, ஏலக்காய் அரிசி, சிறு லவங்கப்பட்டை வகைக்கு விராகனெடை-8, கஸ்தூரி விராகனெடை-1, பச்சைக்கர்ப்பூரம் விராகனெடை-2, இதில் சூரணிப்பதைச் சூரணஞ்செய்து சகலமும் ஒன்றாய்க்கூட்டி, கர்ப்பூர வாசனை வெற்றிலை ரசத்தாலும், கர்ப்பூரவள்ளி ரசத்தாலும், தூதுவேளை ரசத்தாலும், தோல்நீங்கிய இஞ்சி ரசத்தாலும், மிளகு கியாழத்தாலும், சித்தரமூலவேர் கியாழத்தாலும், மஞ்சள் கரிசாலை ரசத்தாலும் தனித்தனியாக ஒவ்வொரு ஜாமம் அரைத்து நிழலிலுலர்த்திச் சுயமான தேனினால் மெழுகுபதமா யரைத்து

வைத்துக்கொள்ளவும்; பயறு பிரமாணம் தேனில் சாப்பிட ஜன்னி, கபரோகம், உப்புசம், முகவாத ஜன்னி, இருமல், மாரடைப்பு, வாதம் இவ்வித வியாதிகளை நீக்கும்.

## குஷ்டத்திற்கு கெந்தக மெழுகு

பருப்பு கெந்தகம் பலம்-2 புதுக் குடுவையில் அடியிற் சிறிய துவாரம்செய்து இன்னொரு குடுவையில் பசுந்தயிர் ¼-படிவிட்டு கெந்தகக் குடுவையை தயிர்க் குடுவையைப் பூமியில் புதைத்த மேல் குடுவையின்மீதில் 10-யெருவில் புடமிட கெந்தகம் உருகி தயிர் குடுவையில் விழும். ஷை கெந்தகத்தை எடுத்துவைத்துக்கொண்டு பூவன்வாழைப்பழம்-25 ஒரு ஈய சட்டியில் போட்டுக் கடுக்காயை நன்றாய்ப் பொடித்து வஸ்திர காயஞ்செய்த தூள் பலம்-3 பழத்தில் போட்டு நன்றாய் கையினால் பிசைந்தால் ஜலமாகும். நன்றாய்ப் பழகின சட்டியில் ஷை பழரசத்தைக் கொஞ்சம் கொஞ்சமாய் 2-தபாவாக விட்டு, எட்டி விறகால் ஜலம் சுண்டுகிற பரியந்தம் எரித்தால் மெழுகாகும். எரிக்கும்போது கிளறிக்கொண்டே இருக்கவும். ஷை மெழுகு குண்டுமணிப் பிரமாணம் கொடுக்கவும்; இச்சா பத்தியம்.

## தோஷா அமிர்த மெழுகு

ஓமம் பலம்-2, பூரம் வகைக்கு விராகனெடை-5 இம்மூன்றையும் முலைப்பால்விட்டு 4-ஜாமம் அரைத்துப் பிறகு தேன் ½-பலம் துளித்துளியாக விட்டு ஒரு ஜாமம் அரைத்துப் பீங்கானில் வைத்துக்கொண்டு தேனிலாவது, இஞ்சி சாரத்திலாவது கொடுக்க ஜன்னி, சுரதோஷம் தீரும்; இச்சா பத்தியம். சாயங்காலம் மிளகு, சுக்கு, கியாழம் கொடுக்கவும்.

## வீர மெழுகு

வீரம் 1-பலம் கொண்டுவந்து மெல்லிய சீலையில் முடிந்து ஏடு பத்தாக இளநீர்-4 கொண்டு உடைத்துப் பழங்கலயத்தில் ஊற்றி அடுப்பேற்றி அதில் ஷை வீரத்தைவிட்டுத் துலாயந்திரமாகக்கட்டி எரிக்கவும்; 2-நாழிகை எரிந்தானபின்பு கலயத்தை எடுத்துவிட்டுத் தொலாயந்திரம் கட்டியிருக்கும் வீர முட்டையை அடுப்புக்கு நேராய்த் தொங்கவிட்டு அடுப்பின்

நெருப்பைக் கிளறி அனல்காட்டி நெருப்பு அவிந்தபிறகு மூடியை அவிழ்த்து மருந்தை ஒரு ஏனத்தில் வைத்துக்கொள்ளவும்; அநுபானம்: உழுந்து பிரமாணம் தேன், முலைப்பால், இஞ்சிசுரசத்தில் கொடுக்கவும். ஜன்னி, சுரதோஷம் யாவுந் தீரும்; இச்சாபத்தியம். மாலை மிளகு கியாழம் கொடுக்கவும்.

மெழுகின் வகைகள் முற்றிற்று.

---

இனி எட்டாம் பாகம் லேகிய முறைகள்

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(எட்டாம் பாகம்)

## லேகிய முறைகள்

விநாயகர் துதி

விருத்தம்

பாக்கியமாகநாளும் பல்லோர்கள்களித்துக்காண
லேக்கியமுறைதானெட்டாம் பாகமாயிதனைக்கூற
வாக்கில்குடியாநின்று வருந்தமிழுதவிசெய்து
காக்கவேவிநாயகன்றன் கழுமலர்காப்புத்தானே.

முகவுரை விருத்தம்

பூட்டினார்லேகியத்தின் வகைதுமார்க்கம்
பொல்லாதபாவிகட்குங் கருமிகட்கும்
காட்டினார்வயதுதான் திங்களொட்டு
களிப்புறவேதின்றதுவு மமிர்தமாகும்
மாட்டினார்சித்தர்கள்தான் செய்யுமார்க்கம்
மகிமையுடன்மண்டலத்தில் யார்க்குங்கிட்ட
மூட்டினார்வைத்திய திறவுகோலை
மேதினியிலேகாம்பரம் வெளியிட்டேனே.

நூன்முக விருத்தம்

சுக்கு லேகியம்

சுக்குபலம்இருபத்தி யஞ்சிதாக்கி
சேரவேபடிரெண்டரை ஜலத்திலேபோட்டுப்
பக்குவமாயெட்டொன்றாகக் கியாழமிட்டு
பனைவெல்லம்பலமிரண்டரை சரியாய்ப்போடு

சிக்கெனவேஅரைப்பலந்தான் கறிவேப்பிலை
சேர்த்தரைக்கால்படி நெய்யில்கிளறியுண்ண
துக்கமுறுங்கிராணிமூலம் கடுப்புவீக்கம்
தொடருமொருபால்சோகை மந்தம்போமே.

(இ - ள்.) சுக்கு 25-பலம் நிறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து 2½-படி தண்ணீரில் கொட்டி, எட்டுக்கு 1-பங்காய்க் கியாழம் வடித்து, பனைவெல்லம் 2½-பலம், ஓமம் ¼-படி, கறி வேப்பிலை ½-பலம் இவைகளை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து கியாழத்தில் கொட்டி, நெய் ⅛-படி விட்டு இவைகளை லேகிய மாகக் கிளறி சாப்பிடக் கிராணி, மூலம், வாய்வு, அதிசாரம், கடுப்புரத்தம், வீக்கம் பாரிச வாய்வு, மந்தம், புளியேப்பம் தீரும், எ - று.

## கைகால் பிடிப்புக்கு லேகியம்

மாவிலிங்கம் பட்டை, சிறுகாஞ்சொரி, அமுக்குனங் கிழங்கு, கண்டங்கத்திரி, பறங்கிப்பட்டை, நீரடிமுத்து, ஓரிலை தாமரைவேர், செப்பு நெரிஞ்சிவேர், முடக்கத்தான்வேர், தாழம்பிதழ்ச் சாறு, பிரண்டைவேர், பூனைவணங்கிவேர், மிள கரணைவேர் இவைகள் வகைக்கு பலம் 1, கோரோஜனம் விராக னெடை-⅛, கஸ்தூரி விராகனெடை-⅛, ஓமப்பூ விராகனெடை ⅛, இவைகளைச் சூரணித்து சமனெடை சர்க்கரை கலந்து அந்தி சந்தி திரிகடிகைப் பிரமாணம் தின்னலாம். அல்லது 1-வீசை விளக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்சியும் சாப்பிட லாம். அல்லது 15-பலம் நெய்யில் சூரணத்தைக் கொட்டி அடுப்பேற்றிக் கிளறிக்கொண்டு வருகையில் நெய் போதா விட்டால், தேன் போதுமானமட்டும் விட்டுக் கிளறி இரக்கி வைத்துக்கொண்டு கெச்சைக்காய்ப் பிரமாணம் 20-நாள் சாப் பிடவும் இச்சாபத்தியம்.

## கடுக்காய் லேகியம்

இருபத்திஐந்துபலம் கடுக்காய்தன்னை
இரண்டரைப்படி ஜலத்தில் போட்டுக்காய்ச்சி
இறுத்துக்கொள்ளெட்டொன்றுய் சுண்டவைத்து
இஞ்சிவோமம் மிளகுசிவதைதிப்பிலியும்
கருத்தாகச்சுக்குசர்க்கரை இவைகளெல்லாம்
கால்பலமாய்ச்சூரணித்துக் கியாழத்திலிட்டு

வருத்தமில்லைகால்படிதான் நெய்யும்விட்டு
வளமாகக்கிளறிபுன்னைக் காய்போலுண்ணே.

(இ - ள்.) கடுக்காய் பலம்-25, கொட்டைபோக்கிச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து 2½-படி ஜலத்தில் கொட்டி எட்டொருபங்காய் கியாழம் வடித்துச் சிவதை, இஞ்சி, மிளகு, ஓமம், திப்பிலி, சுக்கு, சர்க்கரை வகைக்கு பலம்-¼, சூரணஞ் செய்து மேல்படி கியாழத்தை அடுப்பில்வைத்து இந்தச் சூரணத்தைக் கொட்டி பசும்நெய் ¼-படி விட்டு லேகியமாய் கிளறிப் புன்னைக்காயளவு சாப்பிடவும் தீரும். வியாதி அக்கினி மந்தம், சூலை, மலஜல வாய்வு, ஆறுந் தீரும்.

## உஷ்ணத்திற்கு லேகியம்

சுக்கு பலம்-½, அரிசிதிப்பிலி பலம்-1, திப்பிலியை ஒரு குடுவையில் போட்டுக் கொஞ்சம் உமியைப்போட்டு அது முழுகும்படியாய் ஜலம்விட்டு வேகவைத்து இறக்கித் திப்பிலியை எடுத்துக்கொண்டு, சுக்கு கூடச்சேர்த்துக் கல்வத்திலிட்டு நெகிழ அரைத்துப் பில்லை தட்டி எண்ணெய் ஊறிய சட்டியை அடுப்பில் வைத்து 2½-பலம் நெய்யை விட்டு, அதில் பில்லையை வைத்து ½-நாழிகை எரிக்கவும். பிறகு எடுத்துக் கல்வத்தில் துவைத்து அரைத்துப் பில்லை தட்டி மறுபடியும் நெய்யில் வேகவைக்கவும். இப்படி 5-விசை அரைத்து வேகவைத்தெடுக்க இளகியிருக்கும் லேகியமாகப் பிசைந்து வைத்துக்கொண்டு, சுண்டைக்காய்ப் பிரமாணம் அந்தி சந்தி சாப்பிடவும். இச்சா பத்தியம்; கடுகு, நல்லெண்ணெய் கூடா. உஷ்ணந் தீரும்; தேகம் தணியும்.

## நெல்லிக்காய் லேகியம்

முன்போலநெல்லிக்காய் கியாழம்வாங்கி
மிளகுதிப்பிலிசுக்குஓமம் ஏலங்கிராம்பு
தன்மைதரும்குக்கில்வாய் விளங்கந்தனியா
தான்சேருசீரகம் குகைநீர்மதுரம்
சொன்னவைகால்பலமாஞ் சர்க்கரைரெண்டு
சேர்த்தரிக்கால்படிநெய்யில் லேகியத்தை
உன்னதமாய்ட்டாக்களவு கொண்டாயானால்
ஓடுமப்பாக்ஷயங்கிராணி வாய்வுஈளை.

(இ - ள்.) நெல்லிக்காய் பலம்-25, முன்போல் கியாழம் வடித்துத் திப்பிலி, மிளகு, சுக்கு, ஓமம், கிராம்பு, ஏலம், குக்கில், வாய்விளங்கம், சீரகம், தனியா, குகைநீர், மதுரம் வகைக்கு பலம்-¼, சர்க்கரை பலம்-2½, நெய் படி-¼ லேகியம் கிளறிப் பாக்களவு சாப்பிடவும். மேகம், அஸ்திசுரம் காய்தல், கிராணி, வாய்வு, பொருமல், இருமல், கபம், ஈளை, சிலேர்ப்பனம் தீரும், எ - று.

## கட்டுவோதி லேகியம்

சீமை அதிவிடையம் கடுக்காய்ப்பூ, மாசிக்காய், மாதுளம் பழந்தோல், ஜாதிக்காய், லவங்கப்பட்டை, போஸ்தக்காய், கசகசா, மாங்கொட்டைப் பருப்பு, புளியங்கொட்டைத்தோல் இவைகள் வகைக்கு விராகனெடை-1. அபினி, கோரோஜனம் இவைகள் வகைக்கு விராகனெடை-½, நல்ல வெல்லம் பலம்-½, நெய் பலம்-1 நெய்யை அடுப்பிலேற்றி வெல்லத்தைப் போட்டு இவை இரண்டும் கலந்து பாகு ஆகும்போது மேற்படி தினுசுகளைச் சூரணஞ்செய்து வைத்துக்கொண்டிருந்து பாகில் சிறுகச் சிறுகப் போட்டுக் கிளறி லேகியம்போல் இறக்கவும் பெரியவர்கள் குழந்தைகளுக்கும் ஆகும்; சுண்டைக்காய் வீதம் காலையில் கொடுக்கவும். 3-வேளையில் சீதக்கழிச்சல், இரத்த மந்தம் அல்லது அஜீர்ணம் நிற்கும்.

## இருமலுக்கு லேகியம்

மிளகுபலம்நிறுத்தெடுத்துச் சூரணித்து
மகிழ்ச்சியாய்பசும்வெண்ணெய் பலந்தான்வாங்கி
உளவாகஅடுப்பேற்றி உருகும்போது
உத்தமனேகற்கண்டு பலந்தான்போடு
இளகவேசூரணத்தைக் கொட்டிநீதான்
இறக்கிடுவாய்லேகியம்போல் பதமாய்க்கிண்டி
அளவாககழற்சிக்காய் வீதங்கொள்ளு
அகலுமடாயிருமலுந்தா னிச்சாபத்தியம்.

(இ - ள்.) மிளகு பலம்-1, பசும்வெண்ணெய் பலம்-1, சீனு கற்கண்டு பலம்-1 மிளகைச் சூரணித்து ஒரு சட்டியை அடுப்பில் வைத்து நெய்யை ஊற்றி உருகினவுடன் மிளகு சூரணம் போட்டு கற்கண்டுபோட்டு, சிவந்து வருமளவும் கிளறி லேகிய

மாக்கி வைத்துக்கொண்டு கழற்சிக்காய் வீதஞ் சாப்பிடவும், இச்சா பத்தியம், எ - று.

## மதனகாமேசுர லேகியம்

சுக்கு, கிராம்பு, திப்பிலி, ஏலம், லவங்கப்பட்டை, கொத்த மல்லி, அசுவகெந்தி, தக்கோலம், உழுந்து, திராக்ஷை. பெருஞ்சீரகம், மிளகு, சிறுநாவற்பூ, ஜாதிக்காய், லவங்கப் பத்திரி, தாளிசப்பத்திரி, செண்பகப்பூ, கசகசா, முள்வேலம் பிசினி, அபினி, அதிமதுரம், வால்மிளகு, திரிபலாதி, ஜாபத்திரி, கோஷ்டம், கருஞ்சீரகம், கஸ்தூரி மஞ்சள் நீர்முள்ளிவித்து, நிலப்பனங்கிழங்கு இவைகள் வகைக்கு $\frac{1}{4}$-பல மாக எடுத்து வறுக்கவேண்டிய தினுசுகளை வறுத்து தூள் செய்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு, இதற்கு சரியிடையாய் கெஞ்சாவை நிறுத்தெடுத்து நல்ல ஜலத்தில் 7-தரம் கழுவியெடுத்து விரை, காம்பு முதலானதும் நீக்கி, 2-படி நல்ல ஜலத்தில் $\frac{1}{2}$-படி பசுநெய்விட்டு அதில் கெஞ்சா வைப்போட்டு நன்ருய்க் காய்ச்சி சிட்டிகட்டி நெய்யை அயசட்டியில் பிழிந்துகொண்டு, மற்ற நெய்யும் கையால் நன்ருய் வழித்துக்கொண்டு பசும்பால் உழக்கு, சர்க்கரை பலம்-30 ஒன்ருய்விட்டு அடுப்பேற்றி பாகுபதத்தில் சூரணங்களைக் கொட்டி நெய்யைவிட்டுப் பதமாகக்கிளறி இறக்கவும். இர வில் புசித்தானபிறகு 1-கழஞ்சுமுதல் 3-கழஞ்சு வரை யில் புசிக்கலாம். வீரியம் அதிகரிக்கும், திரேகம் சிவந்து வரும், கண்குளிர்ந்து பிரகாசிக்கும், ஈளை, இருமல், மந்தம், சூலை, பழையசுரம், க்ஷயம் இவைகள் நீங்கும்; திரேக ஆரோக் கியமும், மனதிட முண்டாகும்.

## மிளகு லேகியம்

மிளகு பலம்-25, $2\frac{1}{2}$-படி தண்ணீரில் கியாழம் வைத்து எட்டுக்கு ஒரு பங்காய் சுண்ட இறக்கி கற்கண்டு $2\frac{1}{2}$-பலம் அக்கிராகாரம், சீரகம், கிராம்பு, ஏலம், கோஷ்டம், மதுரம், சிறுதேக்கு, வாய்விளங்கம், நருக்குமூலம் வகைக்கு $\frac{1}{4}$-பலமாக எடுத்து சூரணித்து, ஆழாக்கு தேன், $\frac{1}{8}$-ஆழாக்கு ஷை லேகி யத்தில் சூரணத்தைக் கொட்டி நெய், தேன், முதலானதும் விட்டு லேகியமாய் கிண்டி, கெச்சக்காய் வீதம் சாப்பிட

66-இலேற்பனமும் கபங்கள், நீர்தோஷம், சிலவிஷம், மூன்று சுரமும், வாதமுந் தீரும்.

## இந்திரிய வலுவிற்கு மாணி லேகியம்

வெள்ளாட்டின் பீஜம்-50 வாங்கி, பொடியாக அறிந்து வெய்யலில் உலர்த்தி தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொண்டு அமுக்குறுங்கிழங்கு பலம்-1, கசகசா, திரிகடுகு, ஓமம், ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கிராம்பு, அதிமதுரம், கோஷ்டம், அக்கிராகாரம், லவங்கப்பட்டை, லவங்கப்பத்திரி, நீர்முள்ளி விரை, பூனைக்காலி விரை, ஆலன் வித்து, அரசன் வித்து சாரைப் பருப்பு, பாதம் பருப்பு, வகைக்குப் பலம்-¼ இளம் வறுப்பாக வறுத்துச் சூரணஞ்செய்து வைத்துக் கொண்டு கெஞ்சா 2-பலம் எடுத்துக்கொண்டு நல்ல ஜலத்தில் ஏழுதரம் கழுவி விதைகாம்பு முதலானதும் நீக்கி உலர்த்தி, நெய்யில் வறுத்துச் சூரணஞ் செய்து வைத்துக்கொள்ளவும். பசும்பால் ¼-படி அடுப்பின்மேல் வைத்துச் சர்க்கரை 20-பலம் போட்டுப் பாகுபதத்தில் சூரணங்களைக் கலந்து, கொஞ்சம் கொஞ்சமாய் கிளறிக் கொடுத்து நெய் 20-பலம், தேன், 10-பலம் விட்டு லேகிய பாகமாய்க் கிளறிக் கிண்டி இறக்கிக் கொண்டு கொட்டைப்பாக்குப் பிரமாணம் இரவில் புசித்தான பிறகு சாப்பிடவும்.

## மேகம் 21-க்கு லேகியம்

செவப்பு நாயுருவிவேர், செவப்பு நெருஞ்சிவேர். கையாந்தகரைவேர், மாவிலிங்கன்வேர், மிளகரணைவேர், சிவன் வேம்பு வேர், காட்டுக்கருணைவேர், நீர்முள்ளிவேர் வில்வவேர், துத்தி வேர், வெள்ளெருக்கன்வேர், சீதேவி செங்கழணிவேர், நிலை மந்தவேர், வெள்ளை விஷ்ணுகாந்திவேர், ஆனைநெருஞ்சிவேர், பொன்னுங்கண்ணிவேர், உப்பிலாங்கொடிவேர், அவுரிவேர். முடக்கத்தான்வேர், புங்கன்வேர், கருவூமத்தன்வேர், எட்டி வேர், ஆடுதின்னாப்பாளைவேர், விலாவேர், சிறுகட்டுக்கொடி வேர், ஆலம்பட்டை, பூமிசர்க்கரைக்கிழங்கு, மருதம்பட்டை, பூவரசன்பட்டை, செங்கந்தாரிபட்டை, பாவட்டையிலை, புளிக்கருணைக்கிழங்கு, இவைகள்யாவும் வகைக்கு ½-பலம் கொண்டுவந்து உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ் செய்து ½-வீசை நெய்யை

அடுப்பிலேற்றி உருகினவுடன் சர்க்கரை பலம்-10 போட்டுப் பாகுபதமாய்த் தூவிக்கொண்டே கிளற வேண்டியது. நெய் போதாவிட்டால் முன்பாகக் காய்ச்சி எடுகட்டிய பசும்பால் போதுமானமட்டும் நிதானமாய் விட்டுக்கொண்டு கிளறவும். இறக்கும்போது மலைத் தேன் 5-பலம், விரையில்லாத பழைய திராக்ஷைபழம் பலம்-5, பொடியாகக் கத்தரித்த பாதம்பருப்பு பலம்-5, போட்டுக் கிண்டி வைத்துக்கொள்ளவும். கசப்புத் தோன்றாமல் தின்பதற்கு இனிப்பாகவும் வியாதியைக் கண்டிக்குந் தன்மையுள்ள லேகியமென்று அறியவும். காலை மாலை இருவேளையும் புன்னைக்காய் வீதம் 20-நாள் சாப்பிடவும்; மீன், கருவாடு இறைச்சி, லாகிரி, ஸ்திரீ போகம், புகை, சுருட்டு இவைகள் கூடாது. மேகம்-21 தீரும். கருமேகத்தை யுங் கண்டிக்கும். இச்சாபத்தியம்.

## திரிகடுகு லேகியம்

தானேதான்திரிகடுகு ஓமம்வாய்விளங்கன்
  தயவாகவகைவகைக்கு விராகனைந்து
போனென்றபொடிப்பண்ணிச் சர்க்கரைசேர்த்து
  பொங்கியதேன்படிக்கால்நெய் கால்படிவார்த்து
கோனென்றுபிசைந்ததிலே வைத்துக்கொண்டு
  குணமாகநெல்லிக்கா யளவுகொள்ள
வானென்றவாயுவும் அக்கினிமந்தம்
  வாங்குமடாபத்தியந்தா னில்லையாரே.

(இ - ள்.) திரிகடுகு, ஓமம், வாய்விளங்கன் இவைகள் வகைக்கு 5-விராகனெடை எடுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து எடைக்கு எடை சீனிச்சர்க்கரை சேர்த்து ¼-படி தேன், ¼-வீசை நெய் சேர்த்துப் பிசைந்து வேளையொன் றுக்கு நெல்லிக்காய்ப் பிரமாணம் சாப்பிட்டுவர, வாய்வு, அக் கினி மந்தம் இவைகள் நீங்கும், எ - று.

## மன்மத லேகியம்

நொண்டிச்சிந்து

லேகியங் கேளாண்டே—மன்மத
  லேகியங்கூறுகிறேன் வாக்கியமாய்

அடுப்பிலேற்றி உருகினவுடன் சர்க்கரை பலம்-10 போட்டுப் பாகுபதமாய்த் தூவிக்கொண்டே கிளற வேண்டியது. நெய் போதாவிட்டால் முன்பாகக் காய்ச்சி எடுகட்டிய பசும்பால் போதுமானமட்டும் நிதானமாய் விட்டுக்கொண்டு கிளறவும். இறக்கும்போது மலைத் தேன் 5-பலம், விரையில்லாத பழைய திராக்ஷபழம் பலம்-5, பொடியாகக் கத்தரித்த பாதம்பருப்பு பலம்-5, போட்டுக் கிண்டி வைத்துக்கொள்ளவும். கசப்புத் தோன்றுமல் தின்பதற்கு இனிப்பாகவும் வியாதியைக் கண்டிக்குந் தன்மையுள்ள லேகியமென்று அறியவும். காலை மாலை இருவேளையும் புன்னைக்காய் வீதம் 20-நாள் சாப்பிடவும்; மீன், கருவாடு இறைச்சி, லாகிரி, ஸ்திரீ போகம், புகை, சுருட்டு இவைகள் கூடாது. மேகம்-21 தீரும். கருமேகத்தை யுங் கண்டிக்கும். இச்சாபத்தியம்.

## திரிகடுகு லேகியம்

தானேதான்திரிகடுகு ஓமம்வாய்விளங்கன்
தயவாகவகைவகைக்கு விராகனைந்து
போனென்றபொடிப்பண்ணிச் சர்க்கரைசேர்த்து
பொங்கியதேன்படிக்கால்நெய் கால்படிவார்த்து
கோனென்றுபிசைந்ததிலே வைத்துக்கொண்டு
குணமாகநெல்லிக்கா யளவுகொள்ள
வானென்றவாயுவும் அக்கினிமந்தம்
வாங்குமடாபத்தியந்தா னில்லைபாரே.

(இ - ள்.) திரிகடுகு, ஓமம், வாய்விளங்கன் இவைகள் வகைக்கு 5-விராகனெடை எடுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து எடைக்கு எடை சீனிச்சர்க்கரை சேர்த்து ¼-படி தேன், ¼-வீசை நெய் சேர்த்துப் பிசைந்து வேளையொன்றுக்கு நெல்லிக்காய்ப் பிரமாணம் சாப்பிட்டுவர, வாய்வு, அக்கினி மந்தம் இவைகள் நீங்கும், எ - று.

## மன்மத லேகியம்

நொண்டிச்சிந்து

லேகியங் கேளாண்டே—மன்மத
லேகியங்கூறுகிறேன் வாக்கியமாய்

மங்கலிய ஸ்திரீயிடத்தி லதைக்கொடுத்து
தூவிக்கொண் டிருக்கையிலே - நீ
தூரைத்தனஞ் செய்யாமல் கிளறுண்டே
சஞ்சீவிமுடிந்தவுடன்—நல்ல
சாரைபருப்பு கால்படி யாண்டே
வாதுமைப்பருப்பு வுழக்கு—நல்ல
திராக்ஷைப்பழத்தி லஞ்சு பலந்தாக்கு
பேரீச்சம்பழஞ் சேர்த்து—இந்த
நாலும்புகட்டி நன்றாய்க் கிளறுண்டே
செவ்விளநீர் வாரு—கால்படி
சேர்த்தபின் சீனியைந்து பலம்போடு
பசுநெய்சேர்த்தாடு—பனங்கற்கண்டு
அதுவே இடை ஜாடு
தேனில் உழக்குத்தேடு—ஆண்டே
தீர்ந்ததுலேகியம் இனிகேளு
அடிபிடிக்காமல் ஜாடு—ஆண்டே
அடுப்பைவிட்டிறக்கி மேல்மூடு
தந்தினத் தனதனனம் தனனம்.

மன்மதனுர் லேகியந்தான் முடிந்துதாண்டே
மண்டலத்திலிதன்பெருமை யென்னசொல்வேன்
பொன்போலேதிரேகமது வீசுமாண்டே
பெண்களொருஆயிரமும் போதாதாண்டே
பின்தொடர்வார்மேல்விழுவார் பொருளையீவார்
பலமிருக்குதென்றுமதி கெட்டிடாதே
கன்மமதுவினைச்சூழ்ந்து கழுதையாக்கும்
கைதொடுத்தமனைவியன்றி புறம்பேசாதே.

(இ - ள்.) இந்த லேகியம் சாப்பிடும்போது முதல் ஸ்நானம் செய்து மறுநாள் பேதிக்குச் சாப்பிட்டு மற்றுநாள் முதல் லேகியத்தைப் புன்னைக்காயளவு 40-நாள் சாப்பிடவும். இந்த 40-நாளும் இச்சாபத்தியமாக இருக்கவேணும். காலை மாலையும் பால், நெய், தயிர் இதுகளைச் சேர்த்துக்கொள்ளவும். எண்ணெய், கடுகு கூடாதாம். முக்கியமாய் ஸ்திரீபோகம், பொடி, சுருட்டு, லாகிரி வஸ்துக்களை நினைக்கப்படாதாம், எ - று.

## இஞ்சி லேகியம்

சொல்லவேஇஞ்சி லேகியத்தைக்கேளு
தோல்போக்கிபலம்பத்து நிறுத்துக்கொண்டு
மல்லவேபழச்சாற்று லாட்டிமைபோல்
மைந்தனேசட்டியிலே யிட்டுக்கேளு
அல்லவேசீரக மிளகோடேலம்
அதிமதுரந்திப்பிலியுங் கோஷ்டமூலம்
கல்லவேவாலுழுவை தாளிசப்பத்திரி
கடுகோடுகொத்தமல்லி சித்திரமூலம்
அல்லவேசிங்கியொடு குரோசானிவோமம்
அப்பனேவகைக்குஅரை பலமேதூக்கே
தூக்கியேகரிசாலை பூராவும்பழச்சாற்றால்
துவளரைத்துமுன்மருந்தோ டொக்கச்சேரு
ஊக்கமாம்பிரண்டையது மோரிலுப்பிட்டு
உலர்த்திடித்துஒருபலமே போடுபோடு
ஆக்கவேவங்காளச் சீனியப்பா
அதில்பாதிபோட்டாவி நெய்யையவாரே
நெய்வார்த்துலேகியம்போல் பண்ணிக்கொண்டு
நேரமொருபாக்களவு அந்திசந்திகொள்ளு
பொய்யல்லபித்தவாய்வு உஷ்ணகாந்தி
புரட்டல்லசத்திவலிகுன்மம் பித்தகுன்மம்
மெய்யானஅஸ்திசுரம் சன்னிதோஷம்
வீரானஎரிகுன்மம் அஜீர்ணவாய்வு
செய்யவேஉப்புசமும் அரோசிகமுந்தீரும்
தீபமாய்ப்பசியறிந்து சீராய்க்கொள்ளே.

(இ - ள்.) தோல்போக்கின இஞ்சி பலம்-10 கல்வத்தி விட்டு எலுமிச்சம்பழம் சாறுவிட்டு மைபோலரைத்து ஒரு சட்டியை அடுப்பேற்றி ஷை சாற்றை அதில்விட்டு, பிறகு சீரகம், மிளகு, ஏலம், அதிமதுரம், திப்பிலி, கோஷ்டம், மூலம், வாலுழுவை, தாளிசபத்திரி, கடுகு, கொத்தமல்லி, சித்திர மூலம், சிங்கி, குரோசானி ஓமம் இவைகள் வகைக்கு $\frac{1}{2}$-பலமாக எடுத்து கரிச்சாலைச் சாற்றாலும், அல்லது பழச்சாற்றாலும் துவள அரைத்து முன் மருந்துடன் சேர்க்கவும். பிரண்டையை மோரில் உப்பிட்டு ஊறவைத்துலர்த்தி இடித்து 1-பலம் முன்

மருந்துடன் சேர்க்கவும். சீனிச்சர்க்கரை மேல்படி மருந்து எடைக்குப் பாதிசேர்த்து ஆவின்நெய் போதுமானவரைக்கும் விட்டு லேகியம்போல் கிளறி இறக்கிக்கொள்ளவும், எ - று.

வேளையொன்றுக்குக் கொட்டைப் பாக்குப் பிரமாணம் அந்திசந்தி 20-நாள் சாப்பிட, பித்தவாய்வு, உஷ்ணகாந்தி, புரட்டல், அசத்தி, வலிகுன்மம், பித்தகுன்மம், அஸ்திசுரம், ஜன்னி, தோஷம், குன்மம் அஜீர்ணவாய்வு, உப்புசம், அரோசிகம் தீரும்; இச்சாபத்தியம்.

எட்டாம் பாகம் முற்றிற்று.

---

☞ இனி ஒன்பதாம் பாகம் எண்ணெய், தைல முறைகள்.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(ஒன்பதாம் பாகம்)

## எண்ணெய், தைல முறைகள்

விநாயகர் துதி

கலி விருத்தம்

மண்ணுலகோர் மகிழ்ந்துகளித்திட
வெண்ணெய்பாக மியம்பிடவேயின்று
கண்மூன்றுடையான் களித்தளித்திட்டதோர்
விண்ணவர்தொழும் விநாயகன்காப்பரே.

முகவுரை விருத்தம்

வாதியாம்வைத்தியரு மற்றபேர்க்கும்
வன்மையுடன்சூட்சமதா யுணர்ந்துசெய்ய
ஆதரவாம்வைத்தியத் திறவுகோலை
அடைவாகக்கண்டோர்பண் டிதரேயாக
ஓதினேனொன்பதாம் பாகந்தன்னில்
உத்தமனேயெண்ணெயொடு தைலவர்க்கம்
போதவேபரிபாஷை யில்லாமற்றான்
பேசினேன்செஞ்சி யேகாம்பரந்தானே.

நான்முக விருத்தம்

### கெர்ப்பஸ்திரீகள் வயிற்றுவலிக்கு பழையது எண்ணெய்

வாங்கியேவிளக்கெண்ணெய் வீசையொன்று
வளமாகவடுப்பேற்றிச் சொல்லக்கேளு
நீங்கவேதாளிவே ரொருபிடிதான்கொண்டு
நிலையாகஎண்ணெய்தனில் போட்டுக்காய்ச்சு

தாங்கவேவேறதனை யொடித்துப்பாரு
தானதுவும்மொளுக்கென்றால் இறக்கிப்போடு
பாங்காகவுள்ளுக்குச் செலுத்தும்வண்ணம்
பார்த்திடுவாய்வாசகத்தில் பரிட்சையோடு.

(இ - ள்.) விளக்கெண்ணெய் 1-வீசை அடுப்பிலேற்றி, தாளிவேர் ஒரு பிடி கொண்டுவந்து எண்ணெயில் போட்டு, காய்ச்சவும். அந்த வேரை எடுத்து ஒடித்தால் மொளுக்கென்றுடையும் உடனே எண்ணெயை இறக்கவும். காலையில் ½-பலம் எண்ணெய் சாப்பிட்டு உடனே பழையது சாப்பிடவும், கணச்சூடு தீரும். கெற்பத்திலுள்ள சிசுவிற்கு யாதொரு வியாதியும் அணுகாது. கெர்ப்பஸ்திரீ 5-வது மாதமுதல் 9-வது மாதம் வரையில் அந்தந்த மாதமுதலில் 3-நாள் சாப்பிடவும். இச்சாபத்தியம். ஆரோக்கியமா யிருக்கும், எ - று.

## நாரசிம்ம எண்ணெய்

வெள்ளைக் கலியாண முருக்கன்பட்டை, பூவரசன்பட்டை, இலவம்பட்டை தனித்தனி யிளநீர் விட்டு இடித்துப் பிழிந்து ¼-படி ரசம் பிரமதண்டி ரசம், துத்தியிலை ரசம், சிருசின்னி ரசம் வகைக்கு படி-¼, கற்றாழைசோறு தேங்காய்ப் பிரமாணம் வெந்தியம் பலம்-2½ தூள் செய்து 50-பலம் சித்தாமணக்கெண்ணெயை அடுப்பிலேற்றி, வெந்தியத் தூளை போட்டு, கற்றாழை சோற்றைப்போட்டு ஷை பிழிந்து வைத்திருக்கும் ரசங்களையும் ஊற்றிக் காய்ச்சி பதத்தில் வடித்துக்கொண்டு பூரம் ½-பலம் ஷை எண்ணெய் விட்டு அரைத்து அதில் கலந்து வைத்துக் கொண்டு காலையில் ஒரு ரூபா எடை எண்ணெய் புசித்து வெந்நீர் சாதம் சாப்பிடவும். 5-நாள் அல்லது 7-நாள் சாப்பிடவும். மறுபத்தியம் அரையுப்பு, அரைப்புளி சேர்த்துக்கொள்ளவும். தீரும் வியாதி சர்வமேகவெட்டை, குட்டரணங்களும் தீரும்.

## கேணச்சூட்டுக்குக் குளிர்ச்சி எண்ணெய்

சித்தாமணக்குளெண்ணெய் படிதானென்று
சேர்த்திடுவாய்வல்லாரை அரைப்படிச்சார்
உத்தமனேவெந்தியம் பலந்தானிரண்டு
உளவாகப்பசும்பாலில்விட் டரைத்துப்போடு

சித்தியுடன்எண்ணெய்தனில் கலக்கியேதான்
சீராகக்காய்ச்சிச்சர்க்கரை போட்டிறக்கி
உத்தமனேசிறுகரண்டி வீதமேகொள்ளு
உடலிலுள்ளசூடகன்று தணியும்பாரே.

(இ - ள்.) சித்தாமணக்கெண்ணெய் படி-1, வல்லாரை ரசம் படி-½, வெந்தியம் பலம்-2 ஆவின்பாலி லரைத்து எண்ணெயில் கலந்து காய்ச்சி வடித்துக் கொஞ்சம் சர்க்கரை போட்டுக் கொடுத்து வரவும். திரேகம் தணிந்து குளிர்ச்சி யுண்டாகும், எ - று.

## அணைக்கட்டாத்தூர் எண்ணெய்

கரசனாங்கண்ணி, பொன்னாங்கண்ணி, நிலக்கடம்பு, நுணாயிலை, பிரமியிலை, முடக்கத்தான், பொடுதலை, செருப்படை, வெள்ளருகு, முசுமுசுக்கை, புங்கம்வேர், வெங்காயம், எலுமிச்சம்பழம் இவைகளின் சாறு வகைக்கு படி-⅛, விளக்கெண்ணெய் 65-பலம் இவையெல்லாம் ஒன்றாய்க் கலந்து அடுப்பேற்றிப் பதமாய்க் காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கி வைத்துக் கொள்ளவும். காலையில் ஒரு கரண்டி எண்ணெயில் ⅛-பலம் சர்க்கரை 1-பலம் நீராகாரம்கூட்டிச் சாப்பிடவும். உப்பு கூட்டலாம். மேகம் 21-ம் இரத்தப் பிரமியம், கண்டமாலை, மேகரணம், பவுத்திரம், மூலம், முடக்கு, பிடிப்பு, மேகவாய்வு, மேக ஊறல், மேக படலம், புண், சிலந்தி, கிரந்தி அண்டவாய்வு இவைகள் தீரும்.

## பக்கசூலை கெற்பசூலைக்கு எண்ணெய்

மிளகரணை இலையை உரலிலிட்டு ஜலம் வார்த்து இடித்து 12-பலம் ரசம் பிழிந்துகொண்டு அதில் 12-பலம் முத்தெண்ணெய் விட்டு உரித்தெடுத்த பூண்டு திருகு 4-பலம் கூட்டி, காய்ச்சி வடித்து திரேக திடப்படி 3-நாளைக்குக் கொடுத்துவர, பேதியாகும். பேதி அதிகமானால் நோய் நீங்கினதென்று தெரிந்து கொண்டு நிறுத்திவிடவும். இச்சாபத்தியம்.

## குழந்தைகட்கு மாந்த எண்ணெய்

உத்தாமணிரசம் 7½-பலம், விளக்கெண்ணெய் 7-பலம் இரண்டும் கலந்து அடுப்பேற்றிக் காய்ச்சி இறக்கினவுடன் பூரம், ஏலரிசி, லவங்கப்பட்டை, சுக்கு, வகைக்கு விராக

னடை இவைகளைத் தூள்செய்து கல்வத்திலரைத்து எண்ணெயில் கலந்து வைத்துக்கொண்டு வேளைக்கு, கரண்டி வீதம் கொடுக்கவும். உப்பில்லாப் பத்தியம் தாயார்கூட இருக்கவேண்டும்.

## சகல இரணத்திற்கும் எண்ணெய்

கொடிக்கள்ளிச்சாறு படி-½, சித்திரமூலம்வேர், எருக்கன் வேர் கொடிக்கள்ளிவேர், அமுக்கிறாங்கிழங்கு, இவை வகைக்கு பலம்-1 ரசம், ரசசெந்தூரம், கெந்தகம், இவை வகைக்கு கழஞ்சு-1, வேறு வகையாகவும் இடித்துச் சூரணித்து, மற்றச் சரக்கு யாவும் கல்வத்திலிட்டு விளக்கெண்ணெய் வார்த்து 2-ஜாமம் அரைத்து 1-படி விளக்கெண்ணெயில் போட்டுக் கலக்கி ஷை கள்ளிச்சாறும் விட்டு மெழுகு பதமாய்க் காய்ச்சி வடித்துக் காலையில் உச்சிக்கரண்டி வீதம் 5-அல்லது 7-நாள் சாப்பிடவும். இச்சாபத்தியம். அரைக்காரம் சேர்க்கவும். சுட்டபுளி, உப்பு சேர்ப்பதே உத்தமம்.

## கைகால் பிடிப்புக்கு எண்ணெய்

சுத்திசெய்த வாளம் விராகனெடை-4, லவங்கம், சுக்கு, பூரம், வகைக்கு விராகனெடை-2, புங்கம்பால் பலம்-1, விளக்கெண்ணெய் பலம்-10 இந்த நாலுவகை மருந்தையும் கல்வத்திலிட்டு விளக்கெண்ணெய் விட்டரைத்து ஷை எண்ணெயில் கலக்கி மூன்று நாள் சூரியபுடம் வைக்கவும். காலையில் கரண்டி வீதம் 57-நாள் சாப்பிடவும். சுட்டபுளி வறுத்த உப்பு கூட்டவும்.

## அச்சரத்திற்கு எண்ணெய்

வசம்போடுபுளிகருணை கிழங்குதானும்
வெங்காயம்வெள்ளறுகு நஞ்சறுப்பான்வேறு
உளவாகநிலப்பனங் கிழங்குதானும்
உத்தமனேபெருங்கிழங்கு தும்பராஷ்டம்
விதமாகக்கருஞ்சீரகம் கடுகுரோகணியும்
வேண்டாப்பாவினேபீர காட்டுக்கருணைக்கிழங்கு
இவையெல்லாம் வகைவகைக்குப் பலந்தான்கொள்ளு
எழுதிவிட்டேன்வாசகத்தில் வெளியாய்த்தானே.

(இ - ள்.) வசம்பு, புளி, கருணைக்கிழங்கு, வெங்காயம், வெள்ளறுகு, நஞ்சருப்பான்வேர், நிலப்பனங்கிழங்கு, பெருங்கிழங்கு, தும்பராஷ்டம், கருஞ்சீரகம், கடுகுரோகணி, காட்டுக் கருணைக்கிழங்கு, இவை வகைக்கு 1-பலம், ஆற்றுத் துமுட்டிக்காய் 2-பலம், சவுரிக்கிழங்கு பலம்-1, இந்த நிறைவுகள்யாவும் பஞ்சுபோல் இடித்து 1-படி விளக்கெண்ணெயில் போட்டுக் காய்ச்சி வடித்து உச்சிக்கரண்டி அளவு வார்க்கவும். 4-5-விசை பேதியாகும். அதிகமாய்ப் பேதியானால் ஓமம் கொண்டுவந்து வெந்நீரில் அரைத்துப்பால் பிழிந்து 1-அல்லது 2-பாலடை வார்க்கவும். எண்ணெய் 3-நாள் கொடுக்கவும். சுட்டபுளி, வறுத்த உப்பு, சிறுபிள்ளையானால் தாய் பத்தியம் இருக்கவேணும்.

## கொருக்குக்கு வெள்ளைக்கு எண்ணெய்

பூரமுடன்ஏலம்ஓமம் இவைகள்மூன்றும்
புண்ணியனேவிராகனெடை ஒன்றுசேரு
சீராகலவங்கம்எட்டு விராகனுங்கூட்டி
செம்பருத்திச்சாறில்நாலு சாமமாட்டி
நேராகவிளக்கெண்ணெய் ஐந்துபலமும்விட்டு
நம்பியேரவிபுடம்வேர் நாளும்வைத்துப்
போராகக்கரண்டிவீதம் ஏழ்நாளுண்ணப்
பறக்குமடாகொருக்குவெள்ளை இச்சாபத்தியம்.

(இ - ள்.) பூரம், ஓமம், ஏலம் வகைகளுக்கு விராகனெடை-1, லவங்கம் விராகனெடை-8 இவை நான்கும் செம்பருத்தி சாறு விட்டு 4-ஜாமம் அரைத்து 5-பலம் விளக்கெண்ணெயில் கலக்கி ஒருநாள் சூரியபுடம் வைத்து மறுநாள் முதல் காலையில் கரண்டி வீதம் 5-நாள் அல்லது 7-நாள் சாப்பிடவும். இச்சா பத்தியம்; மறுபத்தியம் அவ்வாறே யிருக்கவும் தீரும்.

எண்ணெய் முறைகள் முற்றிற்று.

---

# தைல முறைகள்

## வெட்டிவேர்த் தைலம்

வெட்டிவேர்பத்துபலம் கொண்டுவந்து
வேணமட்டும்இடித்துரெண்டு படிஜலத்தில்
கொட்டியேகால்படிக்குக் கியாழம்கண்ட
கூட்டப்பா நல்லெண்ணெய் சம்முகத்தான்
விட்டுவிடுஅதிமதுரம் பலந்தானென்று
வேணமட்டும்மையதுபோல் அரைத்துப்போடு
சட்டெனவேமெழுகுபத மாகக்காய்ச்சி
ஸ்நானமதுசெய்துவர வியாதிபோச்சே.

(இ - ள்.) வெட்டிவேர் 5-பலம் கொண்டுவந்து மைபோல் இடித்து 1-படி ஜலத்திற் கொட்டி அடுப்பேற்றி எரித்து $\frac{1}{8}$-படி கியாழத்தில் இறக்கி இறுத்து $\frac{1}{4}$-படி நல்லெண்ணெய் சேர்த்து $\frac{1}{2}$-பலம் அதிமதுரம் நெகிழ அரைத்துப்போட்டு மெழுகு பதத்தில் காய்ச்சி இறுத்து ஸ்நானம்பண்ணிவரக் கண்புகைச்சல், காது மத்திமம், மண்டை சூலை, பீனிசம் இவை தீரும், எ - று.

## ஜன்னிக்கு பிரம ராகாசித் தைலம்

இராகாசி மடலை கொண்டுவந்து வரகு, வைக்கோலால் வதக்கிச் சாறுபிழிந்து சாறளவு நல்லெண்ணெய் சேர்த்து அடுப்பேற்றி சிறு தணலாயெரித்து இரண்டும் ஒன்றுபட்ட பிறகு $\frac{1}{2}$-படி தைலமிருந்தால் டக்காமல்லி, சீமைக் கிச்சிலிக் கிழங்கு வகைக்கு $\frac{1}{4}$-பலம் தூள் செய்துபோட்டு இறக்கவும். 4-ஸ்நானத்தில் பின்கழுத்து நோய், பல் ஜிலுஜிலுப்பு, தலை வலி இவைகள் நீங்கும். கோழி சூப்பு, ஆட்டிறைச்சி, கத்தி ரிப்பிஞ்சு, துவரை, மிளகுநீர், ஸ்நானம் செய்த தினம் பகலின் நித்திரை, பொடி, சுருட்டு, அதிக வாசிப்பு ஆகாது.

## வில்வாதித் தைலம்

பத்துபலம்வில்வவேர் கொண்டுவந்து
பஞ்சுபோல்நறுக்கிகொண்டு படிஜலத்தில்
சுட்டுவிடுகால்படிக்கு சுண்டக்காய்ச்சி
துகளாமல்கியாழமதை இறுத்துப்போடு

சிக்கெனவேநல்லெண்ணெய் சமமாய்ச்சேரு
சந்தனந்தான்பலமொன்று நிறுத்துப்போடு
கொப்பெனவேஸ்நானமது செய்வாயானுல்
குடிகொண்டபித்தசூலை கண்புகைச்சல்போமே.

(இ - ள்.) வில்வவேர் 10-பலம் கொண்டுவந்து இடித்து 2-படி ஜலத்தில்போட்டு ¼-படியாக சுண்டக்காய்ச்சி வடித்து அதற்குச் சரியான நல்லெண்ணெய் சேர்த்து அடுப்பேற்றி சந்தனம் 1-பலம் அரைத்துப்போட்டு மெழுகுபதமாகக் காய்ச்சி முழுகவும். பித்தம், பாலவெட்டை, மேகம், கண் குளிர்ச்சி யுண்டாகும், இச்சாபத்தியம், எ - று.

## கீழாநெல்லித் தைலம்

சமூலம் கீழாநெல்லி கொண்டுவந்து இடித்து ½-படி சாறு பிழிந்து ½-படி நல்லெண்ணெய்விட்டு, சிற்றாமுட்டி, அதிமதுரம், சந்தனம் வகைக்கு 2-பலம் அரைத்துப்போட்டுப் பதமாய்க் காய்ச்சித் தலை முழுகிவரப் பித்தம், கைகாலெரிவு, வெள்ளோக்காளம், வாயூறல், நீர்ச் சுருக்கு இவைகள் நீங்கும்; இச்சாபத்தியம்.

## சாலேசுரத்திற்கு சந்தனாதித் தைலம்

சந்தன அத்தர் பலம்-½, கஸ்தூரி, ஓமப்பூ, வலாரிவேர், அவுரிவேர், மாவிலிங்கம்வேர் பொன்னாங்கணிவேர், ஓரிலைத் தாமரைவேர், செவப்புநெருஞ்சிவேர், அமுக்குராங்கிழங்கு, கஸ்தூரி மஞ்சள் வகைக்கு ¼-பலம். இவையில் கஸ்தூரியும், அத்தரும் தவிற மற்றத் தினுசுகளை உலர்த்தி இடித்துச் சூரணஞ் செய்து 1-படி நல்லெண்ணெயில் போட்டுக் கடுகுபதமாய்க் காய்ச்சி ஸ்நானம் செய்யவும். கண் சாலேசரம் உடனே நீங்கும்.

## கழுத்திசுவிற்குத் தைலம்

பேய்துமட்டிக்கா யொன்றைச் சிறு பில்லைகளாக அறுத்து நல்லெண்ணெய் 5-பலத்தில் போட்டுக் கிச்சிலிக் கிழங்கு, கஸ்தூரிமஞ்சள் இவை இரண்டும் துட்டிடை கஸ்தூரி ஒரு விராகனெடை இவை மூன்றும் பொடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சித் தலைமுழுகி வரவும்; கழுத்திசுப்பு நீங்கும்.

## சர்வ இரணத்திற்கும் சிங்கித் தைலம்

முதார்சிங்கிகெந்தகந்தான் சூதம்நாவி
சிறப்பானவசம்போடு படிகாரந்தான்
உரைக்கிறேன் நீலமது பறங்கிச்செக்கை
உத்தமனேதுரிதமுடன் கடுக்காய்பத்து
வகைக்குக்கால்பலந்தான் நிறுத்திடித்து
வளமானபுங்கம்பால் ஒதியம்பாலும்
கருத்தாகத்தேங்காய்ப்பால் வெங்காயச்சாறு
கண்மணியேமெழுகுபதம் விட்டிறக்கே.

(இ - ள்.) முதார்சிங்கு, படிகாரம், கெந்தகம், நீலம், சூதம், பறங்கிச் செக்கை, நாவி, துத்தம், வசம்பு, கடுக்காய் இவைகள் வகைக்கு ¼-பலமாக இடித்து வைத்துக் கொள்ளவும். புங்கம் பால் ஒதியம்பால் ஆழாக்கு, தேங்காய்ப்பால் உழக்கு பிழிந்து காய்ச்சி நெய்யெடுத்து அந்த நெய்யில் தூளைக்கொட்டி ஐ இருவகைப் பாலையும் ஊற்றி வெங்காயச்சாறு ஆழாக்குவிட்டு கடுகுதிரளக் காய்ச்சி இறக்கி வைத்துக்கொண்டு அரையாப்பு ரணம், ஆராதபுண், புரைரணம், குழிப்புண், இரத்தக் கசிவு ரணம், ஆறி ஆறி சிலேக்கும் ஆனைரணம், சிங்கிரணம் இது களுக்கெல்லாம் பூசவும் ஆறிவிடும், எ - று.

## திரேகநிதானத் தைலம்

வாத தேகிகளுக்கு பசும்நெய்-1, எள்ளெண்ணெய்-2, முத்தெண்ணெய்-3, இந்த எடைகளாகக்கூட்டிக் காய்ச்சி முழுகவும். பித்த தேகிகளுக்கு எள்ளெண்ணெய்-1, முத்தெண்ணெய்-2, நெய்-3 இந்த எடைகளாகக் கூட்டிக் காய்ச்சி முழுகி வரவும். சிலேத்தும தேகிகளுக்கு முத்தெண்ணெய்-1, நெய்-2, எள்ளெண்ணெய்-3 இந்த எடைகளாகக்கூட்டிக் காய்ச்சி முழுகி வரவும்; அரப்பு சீரகம்.

## ஐங்கூட்டுத் தைலம்

வேப்பம் எண்ணெய், புங்கம் எண்ணெய், எள்ளெண்ணெய், முத்தெண்ணெய், புன்னையெண்ணெய் இவைகளைச் சமமாகக்கூட்டி காய்ச்சி முழுகிவர வாதம், தனுர்வாதம், ஜன்னி, சுரம், தோஷம் நிவர்த்தியாகும்.

## தலைவலிக்குத் தைலம்

மிளகு பலம்-10, கஸ்தூரிமஞ்சள் பலம் 1, கருஞ்செம்பைச் சாறு, இஞ்சிச்சாறு வகைக்குப்படி-⅛, இரண்டு வகையும் இடித்துச் சூரணித்து ¾-படி நல்லெண்ணெயில்போட்டு இருவகைச் சாறும் ஊற்றி அடுப்பேற்றி கடுகுபதத்தில் காய்ச்சி இறக்கி 4-நாள் வட்டமாக 4-ஸ்நானம் செய்யவும் தீரும்.

## அண்டத் தைலம்

கோழிமுட்டை - 10 கொண்டுவந்து அவித்து மஞ்சள் கருவை எடுத்து யெண்ணெய் பழகிய சட்டியில் போட்டு அடுப்பில் வைத்து எரித்தால் தைலமிறங்கும். எரிக்கும்போது கிளறிக்கொண் டிருக்கவேண்டியது. அந்த தைலத்தை ஒரு கோப்பையி லிறுத்துக்கொண்டு 2-பலம் பூண்டை மேற்றோல் உரித்து கல்வத்தில் போட்டு அரைத்து கொஞ்சம் உமி போட்டுப் பிசறி பிழிந்தால் தைலமிறங்கும். கஸ்தூரி விராகனெடை-¼, குங்குமப்பூ விராகனெடை-½, கோரோசனை விராகனெடை-½ இம்மூன்றும் பூண்டு தைலத்தில் குழைத்து ஷை அண்டத்தைலம் ஒன்றாய் கலந்து சீசாவில் வைத்துக்கொண்டு பெரிய துட்டிடை நாக்கில் தடவவும். சகல தோஷம் தீரும்; நாவறட்சி, வாய்வு முதலானதும் தீரும்; இப்படி 3, 5, அல்லது 7-நாள் கொடுக்கவும்; கடும்பத்தியம்.

## ஜன்னிக்குத் தைலம்

பழிக்காதேயின்னமொரு முறையைக்கேளு
 பனைமரத்தின்வேர் அறுகம்புல்லுவேறு
செழித்தஅரைக்கீரையுட வேருங்கூட
 சேரப்பாநாணையுட கிழங்குதானும்
பழுத்துலர்ந்தமிளகாயில் இரண்டுபோடு
 பளிங்குசாம்பிராணி கால்பலமேபோடு
வழுத்தினயிவ்வகையெல்லா மிடித்துக்கொண்டு
 வையப்பாயெண்ணெய் அரைப்படியைத்தானே.

அரைப்படிதான் நல்லெண்ணெய்அடுப்பிலேற்றி
 ஆறும்ஒன்றாயிடித்து அதிலேபோட்டு

அரைப்பதமாய்த்தைலமது காயும்போது
　அப்பனேஎட்டிபழம் ஒன்றுபோடு
பருவமாய்க்காய்ச்சியதை இறக்கிக்கொண்டு
　பண்ணப்பாவாரத்துக் கிரண்டுஸ்நானம்
சிரசுநோய்புருவநோய் கழுத்துநோயும்
　சொல்லாமல்போகுமடா சூக்ஷமந்தானே.

**தைல முறைகள் முற்றிற்று.**

---

இனி பத்தாம் பாகம் கியாழம், வீரியவிர்த்தி முறைகள்.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திரவுகோல்

(பத்தாம் பாகம்)

## கியாழம், வீரியவிர்த்தி முறைகள்

### விநாயகர் துதி

விருத்தம்

ஐயமின்றி யருமுனி யென்பர்கள்
கைமுறையெனுங் கியாழமதைச்சொல்ல
மெய்யருளாகவே முத்தமிழோங்கிடுந்
துய்யகரிமுகன் தன்னடிபோற்றுவாம்.

### முகவுரை விருத்தம்

பூலோகவைத்தியரே சொல்லக்கேளீர்
பொய்யுரையாப்பதினெண்பேர் புகன்றவாக்கு
காலமதுசென்றாலு மவர்கள்சொன்ன
கைமுறையாங்கியாழமது பொய்த்திடாது
ஞாலமதில்இன்னூலில் பரீக்ஷைகண்டு
நவிலுகின்றமுறைபோலே கண்டுசெய்ய
கோலமுள்ளபிணியாவும் பறந்துபோகக்
கூறினேன்செஞ்சியே காம்பரந்தானே.

### நான்முக விருத்தம்

சுரத்திற்குக் கியாழம்

ருத்திரசடையாந்தன்னைத் துலங்கவேபிட்டுவைத்துச்
சித்தமாயிறக்கிச்சாறு பிழிந்ததில்சொல்லக்கேளு
பத்தியேமிளகுஏலம் பொடியதுசெய்துபோட்டு
சுத்தமாய்க்குடித்தபேர்க்குச் சுரமதுபறக்கும்பாரே.

(இ - ள்.) ருத்திர சடையைப் பிட்டிட்டுப் பிழிந்து அந்த ரசத்தில் மிளகு, ஏலம், தூளாக்கிப் போட்டுக் கொடுத்தால் சுரம் விட்டுப் போகும், எ - று.

## உஷ்ணவாய்விற்குக் கியாழம்

சிவதைவேர்பலம்ரெண்டரை சித்தமாய்க்கொண்டுவந்து
தவமதாய்ப்படி ஜலத்தில் தானதையிடித்துப்போட்டு
அவமதாய்ச்சுண்டக்காய்ச்சி ஆழாக்குக்கியாழம்வாங்கி
உவமதாயிருவேளைகொள்ள ஓடுமேஉஷ்ணந்தானே.

(இ - ள்.) 2½-பலம் சிவதைவேர் கொண்டுவந்து பஞ்சு போல் இடித்து ஒருபடி ஜலம்விட்டு ஆழாக்குக் கியாழமாகக் காய்ச்சி வடித்து இருவேளை கொடுக்க நிவர்த்தியாகும், எ-று.

## பல்வலிக்குக் கியாழம்

நன்னயமாகவேதான் நாயுருவிசமூலந்தன்னை
மன்னனேகியாழம்வாங்கி மருந்ததைநாலொன்றாக்கித்
தன்னையோர்நாலுஐந்துத் தட வைநீகொப்பளிக்க
பின்னியபல்லிலுள்ள பிணியதுபறக்கும்பாரே.

(இ - ள்.) நீலிமருந்து செடியென்னும் அவுரிச்செடி சமூலம் கொண்டுவந்து நாலுக்கொன்றாய்க் கியாழம் வடித்து வாய் கொப்பளிக்க பல்வலி தீரும். 4-5-வேளை செய்யவும், எ - று.

## பித்தவாய்வினால்கண்ட வயிற்றுவலிக்குக் கியாழம்

பறந்திடவேவயிற்றுவலி சொல்லக்கேளு
பகரும்வெட்பாலரிசி பலந்தானாலு
சீரகமும்பலம்நாலு சேருசேரு
செப்புநெருஞ்சிவேர் பலம்அரைதானாகும்
நிறையாகஇம்மூன்று மருந்துசேர்த்து
நெருக்கியதைக்கியாழம்வைத்து மூன்றுநாளும்
வரமாகஉள்ளுக் கிருவேளைகொள்ள
வயிற்றிலுள்ளநோய்களெல்லாம் வாங்கும்பாரே.

(இ - ள்.) வெட்பாலரிசி பலம்-4, சீரகம் பலம்-4, செப்பு நெருஞ்சி பலம்-½, இம்மூன்று மருந்தும் சேர்த்து இடித்து மூன்று நாளைக்கு இரண்டு வேளையும் கியாழம் வைத்துச் சாப்பிட வயிற்றுநோய் தீரும், எ - று.

## மாந்த சுரத்திற்குக் கியாழம்

மிளகு பலம்-¼, அதைச் சாம்பலாக்கி, சீரகம் பலம்-¼, வெடிக்க விட்டுப் புதினுயிலை பிடி-2, செவக்க வறுத்துச் சிவின சுக்கு பலம்-¼, ஏலக்காய் பலம்-¼, நறுக்கிப்போட்டுத் தண்ணீர் படி-½, வார்த்து ¼-படியாக்கி இறக்கி முன் சொன்ன அனுபானத்தில் நாளொன்றுக்கு மூன்றுவேளை கொடுக்கவும்.

## பித்த சுரத்திற்குக் கியாழம்

கோரைக்கிழங்கு, சந்தனத்தூள், வெட்டிவேர், சீந்தில் கொடி, நன்னுரிவேர், சுக்கு, கோஷ்டம், இலுப்பைப்பூ, ஏலக் காய், அதிமதுரம் இவைகளைக் குளிர இடித்துச் சட்டியில் போட்டு 5-நிமிஷம் ஊறவைத்து அடுப்பின்பேரில் வைத்துச் சிறுதீயா யெரித்து, நாலிலொன்ருய்க் காய்ச்சி இரக்கவும். அனுபானத்தில் நாளொன்றுக்கு மூன்றுவேளை கொடுக்கவும்.

## உஷ்ண மாந்தத்திற்குக் கியாழம்

செவியம், சன்ருஷ்டகம், சித்திரமூலம்வேர் பட்டை, சிவின சுக்கு, கெண்டுபரங்கி வகையொன்றுக்கு பலம்-¼, இவை களை யிடித்துச் சட்டியில்போட்டு ⅛-படி ஜலம்விட்டு ஆழாக்குக் காய்ச்சி நாளொன்றுக்கு 3-வேளை கொடுக்கவும்.

## பிள்ளை மாந்தக் கியாழம்

ஆமணக்குஇலை பிடி-2, உப்பு பிடி-1, இவைகளைச் சட்டி யில் போட்டுச் சாம்பலாக்கிக் கொட்டிவிட்டு, அந்த சட்டியில் கருஞ்சீரகம் ¼-பலம், ஓமம் வெடிக்கவிட்டுச் சுக்கு, சன்ருஷ்ட கம் பலம்-¼, நறுக்கிப் போட்டு ½-படி ஜலம் வார்த்து ¼-படி இறக்கவும். நாளொன்றுக்கு 3-வேளை கொடுக்கவும்.

## பித்த சுரத்திற்குக் கியாழம்

வேப்பீர்க்கு, புளியயீர்க்கு, நொச்சியீர்க்கு, மாவீர்க்கு, நுணு ஈர்க்கு, பொடுதலை, உத்தாமணி பிடி-2, பூண்டுதிரி-3, இவைகளைச் சிவக்க வறுத்து, அரிசி திப்பிலி விராகனெடை-1, கோஷ்டம் விராகனெடை-1, இவைகளை நறுக்கிப்போட்டுத் தண்ணீர் ¾-படி விட்டு, 3-ஆழாக்கு இறக்கி நாளொன்றுக்கு 3-வேளை கொடுக்கவும்.

## உப்புச மாந்தத்திற்குக் கியாழம்

கோரைக்கிழங்கு, சீவினசுக்கு, சீந்தில்கொடி, வில்வவோடு, கொத்தமல்லி, பேய்ப்புடலை, திப்பிலி வகைக்குப் பலம்-$\frac{1}{4}$, கடுக்காய்த்தோல் பலம்-$\frac{1}{2}$, கடுகுரோகணி பலம்-$\frac{1}{2}$, இவைகளை குமுற இடித்து 3, 5-பிரித்து ஒவ்வொரு பங்கைச் சட்டியிலிட்டு $\frac{1}{2}$-படி ஜலம்வார்த்து $\frac{1}{4}$-படி ஜலத்துக்கு இறக்கிச் சாப்பிடவும். மறுநாளும் இப்படியே சாப்பிடவும்.

## சுரத்துக்கு வாய்விற்குக் கியாழம்

சூரத்துநிலாவிரை பலம் 1, ஆல்பகடா பழம் பலம்-$\frac{1}{4}$, அதிமதுரம் பலம்-$\frac{1}{4}$, கோரோஜனம் பலம்-$\frac{1}{4}$, கடுக்காய்ப் பிஞ்சி பலம்-$\frac{1}{4}$ இவைகளைக் குமுற இடித்துச் சட்டியில் போட்டு $\frac{1}{2}$-படி ஜலம்விட்டு அன்றிராமுழுதும் ஊறவைத்து மறுநாள் காலையில் அடுப்பில்வைத்து சிறுக எரித்து நாலில் ஒன்றுக வறுத்து அதில் திராக்ஷை, உப்பு விராகனெடை-$\frac{1}{4}$ சேர்த்து நாளொன்றுக்கு 3-வேளை சாப்பிடவும்.

## பித்தசாந்திக்குக் கியாழம்

கரிமஞ்சள், மரமஞ்சள், சரக்கொன்றைப் பட்டை, கெண்டுபறங்கி, திப்பிலிக்கட்டை, கோரைக்கிழங்கு, அதிமதுரம், ஏலக்காய் இவை வகையொன்றுக்கு பலம்-$\frac{1}{4}$ இவைகளைக் குமுற இடித்து நாளொன்றுக்கு 3-வேளை கொடுக்கவும்.

## பித்த சீதளத்திற்குக் கியாழம்

வட்டத்திருப்பி, ஆமையோடு, மிளகு, நிலவேம்பு, காவட்டம்புல்லு, காடிகாரம், கரசலாங்கண்ணி இவைகளைச் சாம்பலாக வறுத்துக்கொண்டு சூரியகாந்தி, விஷ்ணுகாந்தி, நிலத்துளசி இம்மூன்றும் பொன்வறுப்பாய் வறுத்து ஷை சாம்பலுடன் போட்டுக்கொண்டு கருஞ்சீரகம், ஓமம் வெடிக்கவிட்டு, சுக்கு, சன்னராஷ்டகம், சீந்தில் தண்டு, கடுக்காய்த்தோல், களிப்பாக்கு, கடுகுரோகணி, கற்றூழைச் சருகு இவைகளை நறுக்கிப்போட்டு படி ஜலம்விட்டு $\frac{1}{4}$-படியாக இறக்கி அந்தியிலும், காலையிலும் வேளைக்கு ஆழாக்கு வீதம் இரண்டு நாள் கொடுக்க நிவர்த்தியாகும்.

## பித்தவாய்விற்குக் கியாழம்

வட்டத்திருப்பி, நிலவேம்பு, மிளகு, மயிலிறகு, பட்டுத் துணி, வசம்பு இவைகளைச் சாம்பல் அல்லது பஸ்பமாக வறுத்துக்கொண்டு கருஞ்சீரகத்தை வெடிக்கவிட்டு, சுக்கு, மஞ்சள் கொஞ்சம்போட்டு ¾-படி தண்ணீர் விட்டு ஆழாக்குக் கியாழமாக இறக்கி 2-வேளை சாப்பிடவும் தீரும்.

## சாதாரண பித்தத்திற்குக் கியாழம்

வசம்பு பலம்-¼, லவங்கப்பட்டை பலம்-¼, வெள்ளைப் பூண்டு பலம்-¼ இம்மூன்றும் ஒன்றிரண்டாய் உடைத்து வறுத்து ஆழாக்கு ஜலம் விட்டு அரையாழாக்குக் கியாழமாக இறக்கித் தேன் விட்டு 3-வேளை கொடுக்கவும்.

## குளிர்காய்ச்சலில் கண்ட நாவறட்சிக்குக் கியாழம்

வட்டத்திருப்பி, வசம்பு, நிலவேம்பு, நிலப்பூசி, மிளகு இவை 5-தினுசும் சட்டியில்போட்டு நீராகக் கருக்கிக் கருஞ்சீரகம், ஓமம், பொரிய விட்டு அரைப்படி தண்ணீர் விட்டு ஆழாக்குக் கியாழமாக யிறக்கி இருவேளை கொடுக்கத் தீரும்.

கியாழ முறைகள் முற்றிற்று.

---

# விரிய விர்த்தி முறைகள்

---

## இந்திரியங் கட்ட

தண்ணிவிட்டான்கிழங்குநிலப் பனங்கிழங்கு
தன்னோடுஆனையென்ற நெருஞ்சிசேர்த்து
கண்மணியேவகைக்குவொரு பலமாய்த்தூக்கி
கருத்தாகமைபோலே யரைத்தெடுத்து
திண்ணமிலாகால்படி யாவின்பாலில்
தான்கலந்துகாய்ச்சியதை யிரவிலுண்ணு
தண்ணியைப்போல்நீத்திருந்த விந்துதானும்
தானதுவும் நுங்கைப்போல் கட்டும்பாரே.

(இ - ள்.) பச்சை நிலப்பனங்கிழங்கு, சீனம், தண்ணீர் விட்டான் கிழங்கு, ஆனைநெருஞ்சிக்காய் வகைக்கு தோலா-1

இவைகளை மைபோல் அரைத்து ¼-படி பசும்பாலில் கலக்கி, காய்ச்சி இரவில் புசித்தான பிறகு சாப்பிடவும். இப்படி 3-நாள் கொள்ள; நீத்திருந்த இந்திரியங் கட்டும், எ - று.

## வீரிய விர்த்திக்கு

சுக்கோடுசந்தனத்தூள் வகைக்குரெண்டு
பலமாககாசினிவிரை பலந்தான்ஒன்று
சிக்கெனவேசீரகமும் பலந்தானொன்று
சேர்த்துமேகல்வத்தி லிட்டரைத்துப்
பக்குவமாய்ப்பில்லைதட்டி வுலர்த்திக்கொண்டு
பாலகனேவேளைக்கு துலாவிடையேகொள்ளு
தக்கபடிரூபாஎடை பன்னீருண்ணு
தப்பினால்நல்லஜலம் வுண்டிடலாமே.

(இ - ள்.) சந்தனத்தூள் பலம்-2, சுக்கு பலம்-2, காசினி விரை பலம்-1, சீரகம் பலம்-1 இவைகளைக் கல்வத்திலரைத்துப் பில்லை பில்லையாகச் செய்துலர்த்தி, வேளைக்கு ஒரு தோலா வீதம் கொடுத்து உடனே பன்னீராகிலும் நல்ல ஜலமாகிலும் ஒரு ரூபாஎடை சாப்பிடவும், எ - று.

## இந்திரியக்கட்டுக்குச் சூரணம்

நறுவிலியன் பிஞ்சு, கருவேலன் பிஞ்சு, காட்டுப் பிரண்டை இலை இவைகளைத் தனித் தனியாய் நிழலிலுலர்த்தி இடித்துச் சூரணமாகச் செய்து, அதற்குச் சரி எடையாய் சர்க்கரை கூட்டி, இரவில் போஜனஞ் செய்தபிறகு, திரிகடிப் பிரமாணம் புசித்து ஆழாக்குப் பால் சாப்பிடவும். இப்படிக்கு 15-நாள் புசிக்க நீத்திருந்த இந்திரியங் கட்டும்.

## இந்திரிய புஷ்டிக்கு

ஒரு கோழிமுட்டை வெள்ளைக் கருவும், தேன், இஞ்சி ரசம், பசுநெய், வெள்ளைவெங்காயம் இவ்வைந்தும் சம எடையாய்க்கூட்டி மத்தித்து சிறுலவங்கப்பட்டை விராகனெடை-½ கூட்டிப் புசிக்கவும். இவ்விதம் 7-நாளைக்குப் புசிக்கும்போது 1-பலம் நல்லெண்ணெயில் ¼-தோலா குங்குமப்பூ கூட்டி இழைத்து லிங்கத்திற்கு லேப்செய்து வரவும். அதாவது மூலாம் பூசுவதுபோல் மேலே தடவி வரவும். இந்திரியம் அதிகரிக்கும்; லிங்கம் வலிவு தரும்.

## வீரிய விர்த்திக்கு

காலையில் எழுந்து பொன்னுங்கண்ணி இலைகளைப் பிடுங்கி வாய் கொண்டமட்டும் மென்று தின்னவும். இப்படி 40 நாளைக்குத் தின்றுவர வீரிய விர்த்தியாம்.

## விந்து ஸ்கலிதமாகா திருக்க

தாழம்பூவின் உள்ளே இருக்கும் விபூதியை எடுத்துக் கோழிமுட்டை வெள்ளைக் கருவாலே இழைத்துத் தண்டில் பூசிப் புணர விந்து சீக்கிரத்தில் ஸ்கலிதமாகாது.

## பீஜம் கெட்டிப்பட

எட்டிக்கொட்டை, அமுக்கனுங்கிழங்கு, வசம்பு சமனெடையாக எடுத்துப் பசும்பால் விட்டரைத்து லிங்கநரம்புமீது ஒரு வாரம் தேய்த்துவரக் கெட்டிப்படும்; மிகுந்த வலிவுகொள்ளும்.

## வீரிய விர்த்திக்கு

ஜாதிக்காய், அபினி, காமப்பூ, லவங்கம் வகைக்கு 1¼-விராகனிடையாக எடுத்து அரைத்து ஒரு ஊர்க்குருவியின் வயிற்றைக் கீறிக் குடல் முதலான அசுத்தங்களைநீக்கி அதனுள்வைத்து நூலினல் தைத்து அதற்குப் போதுமான நெய்யில் போட்டுப் பொரித்து எடுத்து எலும்பு போக்கி மெழுகுபோ லரைத்துக் கெச்சக்காய்ப் பிரமாணம் சாப்பிட்டு உடனே ஆழாக்குப் பால் சாப்பிடவும். இப்படி 40-நாள் சாப்பிட வீரியவிர்த்தியும் திரேகவலிவுங் கொடுக்கும்.

## வீரியவிர்த்தி லேகியம்

ஜாதிக்காய், சாரைப்பருப்பு, வாதுமைப்பருப்பு, காமப்பூ, மாவுசுக்கு, தேத்தான் கொட்டை, முருங்கைப் பிசின், முருங்கைப்பூ, வகைக்கு 2½-விராகனெடையாக எடுத்து ஒரு கோழிமுட்டை வெள்ளைக் கருவினல் மெழுகுபோலரைத்து 1-பலம் நெய்யில் போட்டு ½-பலம் சர்க்கரை கூட்டி அடுப்பேற்றி லேகியம்போற் கிண்டிக் கெச்சக்காய்ப் பிரமாணம் இருவேளை சாப்பிடவும். இப்படி 30-நாள் சாப்பிடவும்; அதுவரையிலும் ஸ்திரீ சம்பந்தங்கூடாது.

## இருதய வலுவிற்கு

சிறு லவங்கப்பட்டை, சிவப்பு நிறமான காவி சந்தனத் தூள் வகைக்கு விராகனெடை-1, தூள்செய்து வெள்ளைச்சர்க்கரை 4-விராகனெடையில் கூட்டிப் புசிக்கவும்.

## இதுவுமது

இலவன்கோந்து, சுக்கு, ஏலரிசி, சோம்பு, அதிமதுரம், சந்தனம், வில்வசதை, ரோஜாப்பூ வகைக்கு தோலா-1, தனியா பலம்-3, சீனுகற்கண்டு பலம்-2, இவைகளைச் சூரணஞ் செய்து, முன்னுகக் கற்கண்டை அடுப்பேற்றி ஜலம் கொஞ்சம் விட்டுப் பாகுசெய்து, அதிற் சூரணங்களைக் கொட்டிப் பாகமாய்க் கிளறி வேளைக்கு, தோலா வீதம் சாப்பிடவும்.

## சரீரம் நன்ருக

சுக்கு, கடுக்காய், திப்பிலி. வாலுளுவையரிசி, சமனுகச் சேர்த்துத் தேனில் அரைத்துத் தூதுளங்காய்ப் பிரமாணம் சாப்பிட்டு உடனே பால் ஆழாக்குச் சாப்பிடவும்.

பத்தாவது பாகம் முற்றிற்று.

---

☞ இனி, பதிஞேராவது பாகம் கண்டா அவிழ்த பாகம்.

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

(பதினோராம் பாகம்)

## கண்டா அவிழ்த பாகம்

### விநாயகர் துதி

கலி விருத்தம்

கண்டாயவிழ்தங் கனமுடனோதிடும்
பண்டாரும்பதினோராம் பாகமிது
செண்டுபோல்பிணி தானதுபறந்திட
கண்டுதமிழ்க்குமுன் கணபதிகாப்பரே.

### நூன்முக விருத்தம்

### நீரொழுக்குக்கு மருந்து

மன்னனேகேள்திராக்ஷைப்பழ மதைக்கொண்டுவந்து
உன்னிதமிளகுசாம்ப லாக்கியேயொக்கசேர்த்துத்
தன்மையாயரைத்துவுண்ணத் தங்குநீரொழுக்குநீங்கும்
கன்னலுமொழியேகல் லடைப்புமதுதீரும்பாரே.

(இ - ள்.) திராக்ஷைப்பழத்துடன் மிளகும் சமமாய்ச் சேர்த்து அரைத்துச் சாப்பிடக் கல்லடைப்பு, நீரொழுக்கு தீரும், எ - று.

### வாய் வேக்காளத்திற்கு மருந்து

சிந்தையில்கவனமாகத் திருநீற்றுப்பச்சிலையைநீதான்
அந்தமாயதிகாலையி லருந்துவாய்வாய்கொள்ளுமட்டும்
விந்தையாயதுவேயேழு தினமதுதின்றையானல்
பந்தமாம்வாய்வேக்காளம் பறந்திடும்பரீட்சைபாரே.

(இ - ள்.) அதிகாலையில் திருநீற்றுப்பச்சிலையை வாய் கொண்டமட்டும் மென்று தின்ன நீங்கும். 5-7 நாள் தின்ன வும், எ - று.

## பல்வலிக்குக் கியாழம்

நன்னாரிவேர்க்கியாழத்தில் நவின்றிடுங்காடிவிட்டு
மன்னனேவந்துநாளில் மறவாமல்சொல்லக்கேளு
தன்னிகராகவாயில் தான்வார்த்துக்கொப்பளித்து
உன்னிதமாகவந்தால் ஓடுமேபல்லின்நோயு

(இ - ள்.) நன்னாரிவேர்க் கியாழத்தில் காடி கொஞ்சம் விட்டு வாய் கொப்பளித்துவரப் பல்வலி சொஸ்தப்படும், எ-று.

## படைகளுக்குப் பூசும் மருந்து

நத்தையைச்சுட்டுச்சாம்ப லாக்கியேசொல்லக்கேளு
சித்தமாய்த்தேனில்கூட்டிப் படைகளின்புண்ணோரத்தில்
சுத்தியேதடவிவந்தால் சொல்படைபுண்களெல்லாம்
தத்தியேவுன்னைவிட்டுத் தானதுவோடும்பாரே.

(இ - ள்.) நத்தையைச் சுட்ட சாம்பலைத் தேனில் கலந்து படைகளின் ஓரத்தில் வரும் புண்ணின்மேல்பூசச் சொஸ்த மாகும், எ - று.

## இரவு பேதி

வாளம்-¼, பூரம்-¼, ரசபற்பம் பலம்-¼ மூன்றையுஞ் சேர்த் துக் கல்வத்திலிட்டு ஒரு பிடிசாதம்போட்டு 2-ஜாமம் அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி இரவு போஜனமானபின் கொஞ்சம் சாதத்தில் 1-அல்லது 2-மாத் திரை வைத்து விழுங்கவும். மூன்றாவது ஜாமத்தில் சுகமாய்ப் பேதியாகும். சூப்புசாதம், கத்திரிப்பிஞ்சு முருங்கைப்பிஞ்சு சேர்க்கவும்.

## சஞ்சீவி மாத்திரை

இருவி, நாபி, தாரம், சூதம், கெந்தி, வெங்காரம், சுக்கு, தான்றிக்காய், வறுத்தமிளகு, திப்பிலி வகைக்கு கழஞ்சு-1, வாளம் கழஞ்சு 5 இவைகளைச் சுத்திசெய்து கையாந்த கரைச் சாற்றால் 7-நாள் அரைத்துக் குன்றிப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி அறுவகை மூலத்து வாய்வு, விஷக்கடி,

குன்மம், சூலைப்பிரமியம், மலக்கட்டு, எரிகுன்மம், க்ஷயத்துக்கும் மிளகு கியாழம் சுக்குக் கியாழம் இஞ்சி சுரசம் இதுகளில் அநுபானத்தில் கொடுக்கவும்.

## சகல சுரத்திற்கும் குயினு மாத்திரை

குயினு அவுன்ஸ்-4, திப்பிலி-4, மிளகு வறுத்தது-4, சித்தரத்தை-2, அக்கிராகாரம்-2, சுத்தி செய்த ரத்தபாளம் தனித்தனி தூள்செய்து கூட்டி இஞ்சி ரசத்திலாவது வேலம் கோந்து தெளிவு ஜலத்திலுல் பிசைந்து கடலைப் பிரமாணம் மாத்திரை செய்து தேகதிடம் அறிந்து 2, 3, 5, சீதள சுரத்திற்குத் தேனிலும்; பித்த சுரத்திற்கு இஞ்சி ரசத்திலும்; வாத சுரத்திற்குச் சின்கொயினுப்பட்டைக் கியாழத்திலும்; சகல சுரத்துக்கும் இந்த அநுபானத்தில் கொடுக்கவும்.

## பெரும்பாட்டுக்கு

ஆனைக்கண்ணன்ஒருபிடியும் அசுர்விரோதியிளம்பிஞ்சும்
கானக்குதிரைமேல்தோலும் காலில்பிடியாய்மாட்டியதும்
தாயைக்கொன்ருள்தனிச்சாற்றில் தயங்கிக்கரைத்துகுடிப்பிருய்
மானேபொழுதும்விழியாளே வடுகும்தமிழுங்குணமாமே.

நறுவிலம் மரப்பட்டை, அத்திப்பட்டை, கருவேலம் பட்டை, நாவற்பட்டை, இவைகளை நிழலிலுலர்த்தித் தனியாக இடித்துச் சூரணித்துச் சமமாகக் கலந்து வைத்துக்கொண்டு, ⅛-படி காறரிசியை இரவில் ஊறப்போட்டு, காலையில் தண்ணீரை நீக்கி துணியின்மேல் சிறிது உலரவைத்து, இடித்து மாவாக்கி மேற்கூறிய சூரணத்தில் 1-பலம் கலந்து, அவியந்தரத்தில் வைத்து மாவு வெந்தபின் சிறிது நெய்யும் சர்க்கரையும் சேர்த்து 3-நாள் சாப்பிடுக.

## தாகமடங்க

சுட்டரொட்டி ஜலத்தில் விட்டு அடுப்புக் கரியின்தூள் கொஞ்சம் போட்டுக் காய்ச்சிக் கொடுக்கவும்.

## புதிதான மூலநோய்க்கு

கஞ்சாயிலை பிடி-1, மஞ்சள்தூள் விராகனெடை-2, எள்ளெண்ணெய் விராகனெடை-2, இவைகளைக் கூட்டியரைத்துத் தடவவும்.

## சாதம் ஏற்கவும் தேக வலுவிற்கும்

நிலவேம்பு விராகனெடை-4, கிச்சிலித்தோல் விராகனெடை-1, தனியா விராகனெடை-½, சாராயம் விராகனெடை-32, 33-பலம் வெந்நீர் கூட்டி 2-நாள் சென்று வடிகட்டி வேளைக்கு 8-விராகனெடையாக இரண்டு வேளை சாப்பிடவும்.

## பேதிக்கு

சந்திரமல்லி வேர் என்னும் பேதிக்கிழங்கு 1-விராகனெடை, திராட்சை உப்பு 2-விராகனெடை கூட்டி, 1-விராகனெடை கொடுக்கவும்.

## இதுவுமது

அதிமதுரம் விராகனெடை-32, திராட்சை உப்பு விராகனெடை-8, கியாழம் வடித்துக் கொடுக்கப் பேதியாகும், தாகமடங்கும்.

## இதுவுமது

நிலாவிரை விராகனெடை-4, தனியா விராகனெடை-1, கியாழம் வடித்துத் திராட்சை உப்பு விராகனெடை-½ கூட்டிக் கொடுக்கவும்.

## விரை வீக்கத்திற்குக் கண் நோய்களுக்கு

நொச்சி யிலை வேகவைத்துக்கட்டக் குணப்படும்.

## ஆரோக்கிய கலிக்கம்

தும்பைப்பூ-100, களாப்பூ-100, மிளகு பலம்-1 மிளகை மாத்திரம் ஒன்றிரண்டாய்த் தட்டி, இந்த 3-இனுசும் ¾-படி நல்லெண்ணெயில்போட்டு ஒரு புட்டியிலூற்றிக் கார்க்கு அடைத்துப் பூமியில் ¾-கெஜம் ஆழத்தில் குழிவெட்டிப் புதைத்து, 40-நாள் பொறுத்தெடுத்துக்கொண்டு வெள்ளிக் கம்பியினால் தொட்டுக் கலிக்கம்போலக் காலையில் தீட்டிவந்தால் சூடு, கண்ணெரிச்சல், காசம் நீங்கிவிடும்; வெகு ஆரோக்கியங் கொடுக்கும்.

## நேத்திரபேதி

ஈறு எருமைப்பாலில் சித்தாமணக்குப் பருப்பை இழைத்துத் தீட்டினால் மறுநாள் வரையில் கண்களில் பீளைச்சாறும், நேத்திரங்கள் பரிசுத்தமாயிருக்கும்.

## அந்திமாலைக்கு

கிருஷ்ண துளசிஇலை ரசம் 2-துளியாக நேத்திரத்தில் விடவும். இப்படி 3-நாளைக்குக் காலையில்விட, குணப்படும்.

## நேத்திரசுத்தி கம்பி

காரீயத்தைத் திரிபலாதிக் கியாழத்திலும், மழைநீரிலும் கரிச்சாலைரசத்திலும், பசும்நெய்யிலும், தேனிலும் தனித்தனியாக உருக்கியூற்றி 4-அங்குல நீளத்தில் கம்பிபோல் தீட்டி வைத்துக்கொண்டு காலையில் எழுந்தவுடனே கண்களில் தீட்டிவந்தால் நேத்திர ரோகங்கள் வராதிருக்கும்.

## துர்மாமிச வளர்ச்சிக்கு

10-கெஞ்சா விரையை ஊசியில் குத்தித் தீபத்தில்காட்டிக் கருக்கி வெண்ணெயில் குழைத்துக் கண்களில் தீட்டி வரவும்.

## காது சீழுக்கு

மஞ்ஜெசிலை, தாளகம், செங்கொட்டை வகைக்கு விராகனெடை-1 வாங்கித் தூளாக இடித்து 3-பலம் நல்லெண்ணெயில் போட்டு வெள்ளாட்டு நீர் ஆழாக்குவிட்டுப் பதமாய்க் காய்ச்சி வைத்துக்கொண்டு காதுக்கு 3-வேளைவிடத் தீரும்.

## இதுவுமது

வில்வப்பழஞ்சதையை எள்ளெண்ணெயில் போட்டு வேக வைத்துக் காதில்விட தீரும்.

## காதுகீழ்க் குத்தலுக்கு

பருத்தி இளங்காயும், எருக்கன் இளங்காயும் வெதுப்பிச் சாறு பிழிந்து காதில் விடவும்.

## காதுகீழ் வேதனைக்கு

இந்துப்பு, சுக்கு எண்ணெயில்விட்டுக் காய்ச்சிக் காதில் விடவும் தீரும்; அல்லது பெருங்காயம், முள்ளிவேர், முருங்கை

வேர், இலைக்கள்ளியிலை சமனாய் எடுத்தரைத்து நல்லெண்ணெயில் காய்ச்சிக் காதில்விடவும். அல்லது வெள்ளைப்பூண்டு, முருங்கைவேர்ப்பட்டை, எருக்கம்பூ, கள்ளிப்பால் வகைக்கு விராகனெடை-1, நண்டு-1 இவைகளைச் சிதைத்து $\frac{1}{4}$-வடி வேப்பெண்ணெயில் போட்டுக் காய்ச்சி விடவும்.

## காதிரைச்சலுக்கு

தைவேளைச்சாறு, நல்லெண்ணெயும் சமமாய்க் கூட்டிக் காய்ச்சிக் காதில் விடவும்.

## காதில் சதைவளர்ச்சி சீழ்

1-பலம் நல்லெண்ணெயில் ஒரு கரப்பான் பூச்சியைப் போட்டுக் காய்ச்சிவிடவும்.

## காது பொங்குதல் சீழ்

1-பலகரையை அடுப்பில் நன்றாய்ச் சுட்டு இடித்துத் தூளாக்கி ஒரு சிட்டிக்கை காதில்போட்டு எலுமிச்சம்பழ ரசம் கொஞ்சம் பிழியவும்.

## நீர்ச்சுருக்கிற்கு

முள்ளங்கி கிழங்கை இடித்துச் சாறுபிழிந்து வெள்ளைச் சர்க்கரை கலந்து சாப்பிடவும்.

## இதுவுமது

காசிலி விரை, வெள்ளரி விரை, துளசி விரை, அரசிலி ஊது, விளாம்பிசினி, வால்மிளகு வகைக்கு $\frac{1}{2}$-பலம் எடுத்துச் சூரணமாக்கிச் சமனெடை பனங்கற்கண்டுச் சேர்த்து ஆழாக்குப் பசும்பாலில் கலந்து காலையில் சாப்பிட நீர்ச்சுருக்கு, வெள்ளையும் நீங்கும்.

## நீரடைப்பிற்கு

வால்மிளகு விராகனெடை-1$\frac{1}{2}$ இடித்து வஸ்திரகாயஞ் செய்து தண்ணீர் பலம்-10 கரைத்து ஒரு நாளைக்கு 4-தரம் கொடுக்கவும்.

## ஆசனக் கடுப்பிற்கு

$\frac{1}{4}$-படி பசும்பாலில் 3-எலுமிச்சம்பழம் பிழிந்து சிறுகுச்சியினால் கடைவதுபோல் சிலுப்பித் தெளியவைத்தால் மேலே

தெளிவாக ஜலம் நிற்கும். அதை யிறுத்துக் குடித்தால் உடனே ஆசனக்கடுப்பு நிற்கும்.

## கொருக்கிற்கு

லிங்கம், பூரம், முதார்சிங்கு, படிகாரம் படிகாரத்தை மாத்திரம் நெருப்பிலிட்டுப் பொங்கவைத்து நன்றாய்ப் பூர்த்தபின் எடுத்து 4-தினுசும் ஓரிடையாய் நிறுத்து மைபோல் தூளாக்கிக் கொஞ்சம் வெண்ணெய் விட்டு மெழுகுபோல் குழைத்து டப்பியில் வைத்துக்கொண்டு லிங்கத்தின் மேல்வரும் மேகரணத்திற்கும், சுவர்லெட்டு நீரினல் கழுவித் துடைத்துவிட்டு இந்த மூலாஜனத் தடவ மூன்று வேளையில் உலரும்.

## ஆராத இரணங்களுக்குக் களிம்பு

துருசு விராகனெடை-4, முதார்சிங்கு விராகனெடை-1½, மெழுகு விராகனெடை-12, வெள்ளைக்குங்கிலியம் விராகனெடை-9, தலை மண்டையோடு-1, நல்லெண்ணெய் பலம்-5, ஒரு பெரிய சட்டியில் எண்ணெயை ஊற்றி மெழுகைப் போட்டுக் காய்ச்சி உருகினவுடன் மற்ற மருந்துகளைப் பொடித்துத் தூள்செய்து போட்டுக் காய்ச்சி ஒரு பெரிய சட்டியில் தண்ணீர்விட்டு அதில் காய்ச்சிய மருந்தை சாய்த்துக் கையால் பிசைந்தால் வெண்ணெய்போல் வரும். அதை எடுத்துக் கொண்டு சீலையில் தடவி கொருக்கு, குழிப்புண், மேகரணம் இவைகளுக்குப் போட 3-வேளையில் தீரும்.

## மேகச்சூட்டுக்குச் சாந்தி

துத்தி இலையைக் கியாழம் வைத்திருந்து பாலுஞ் சர்க்கரையுங் கலந்து சாப்பிட்டுவரவும், சாந்தமாய் இருக்கும்.

## நீர் கடுப்பிற்கு

துத்திவேர் பலம்-3, திராக்ஷை பலம்-1½ நல்ல ஜலத்தில் கியாழமிட்டுச் சாப்பிட்டுவரவும்.

## மலச் சிக்கலுக்கு

துத்தியிலையில் சிறுபயறு, வெங்காயம், சமமாய்ச்சேர்த்து சமைத்துச் சாப்பிடக் குணமாகும்.

## மலம் உதைய

சரக்கொன்றைப்பூ, புளி, சர்க்கரை, உப்பு, மிளகாய்க் கூட்டித் துவையல் செய்து சாப்பிட மலம் உதயமாகும்.

## வயிற்றுக் கடுப்பிற்கு

ஆலம் விழுதை எருமைத் தயிரில் அரைத்து எலுமிச்சம் பழ ரசம் 1-பலம் கூட்டிப் பிசைந்து சாப்பிடவும்.

## வாய் வேக்காட்டிற்கு

மருதன் இலையைக் கியாழம் வைத்திருந்து கொப்பளிக்க நீங்கும்.

## வெள்ளைக்கு

லவங்கப்பட்டை, ஏலரிசி, ஜாதிக்காய், ஜாபத்திரி, வெள்ளை மிளகு, வகைக்கு விராகனெடை-½, பூரம் விராகனெடை-1, விளக்கெண்ணெய் 10-பலத்தில் அரைத்துப் போட்டுக் காய்ச்சி வேளைக்கு ஒரு கரண்டி வீதம் ஏழுநாள் சாப்பிடவும்.

## தீராத வெள்ளைக்கு

வெள்ளைக்குங்கிலியம் பொடிசெய்து ஆற்று ஜலத்தில் போட்டுக் கொதிக்கவைத்து எடுத்து இப்படி ஏழு தகுதி கொதிக்கவைத்து எடுத்து அந்த எடைக்கு இரண்டெடை சீனகற்கண்டு தூள்சேர்த்து அந்திசந்தி திரிகடிப் பிரமாணம் கொடுக்கவும். இச்சா பத்தியம்.

## புது வெள்ளைக்கு

பழம்பாசி இலையையும், சீரகமும் அரைத்து எருமைத் தயிரிற் கலந்து 3-நாள் கொடுக்கவும். இச்சா பத்தியம்.

## இதுவும் வெள்ளைக்கு

பச்சைமிளகாய் இலை ஒரு பிடி எடுத்து 9-மிளகு எண்ணி வைத்து அரைத்துத் தயிரில் கலந்து காலையில் 3 - நாள் கொடுக்கவும். இச்சா பத்தியம்.

## இதுவுமது

பீச்சங்கன் இலை, கீழாநெல்லி இலை, பழம்பாசி இலை மூன்றும் சம எடையாய்ச் சேர்த்து அரைத்து எலுமிச்சங்காயளவு

எடுத்து அத்துடன் பொங்கவைத்துப் படிகாரத்தூள் திரி கடிப் பிரமாணம் சேர்த்துத் தயிரில் கலந்து காலையில் சாப்பிடவும். கடும்பத்தியம். இப்படி மூன்றுநாள் சாப்பிட்டு, மறு பத்தியம் 5-நாள் ஆனபிறகு ஓமம்தேய்த்துத் தலை முழுகவும்.

## இரத்த வெள்ளைக்கு

கெச்சக்காயிலை ரசம் பலம்-½ தயிரிற் கலந்து கொடுக்கவும். 1-பலம் சிறு லவங்கப்பட்டையைக் கியாழம் வைத்து அந்தியில் கொடுக்கவும். கடும் பத்தியம். இப்படி 3-நாள் கொடுக்கவும்.

## கைகால் குடைச்சலுக்கு

பூமிசர்க்கரைக் கிழங்கை நல்ல ஜலத்தில் அரைத்துப் பூசி வரவும்.

## மேகந்தீர

சீந்திலுப்பு, மூங்கிலுப்பு, ஏலக்காய், கற்கண்டு கூட்டி அரைத்துச் சுண்டைக்காய்ப் பிரமாணம் கொடுக்கவும்.

## வெட்டுக்காயத்தின் உதிரப்பெருக்கு நிற்க

மாசிக்காய்களைச் சுட்டு அதின் சாம்பல்களைப் பலமாய் வைத்தழுத்த உதிரப்பெருக்கு நிற்கும்.

## வெட்டுக்காயம், அடிகள் ரணங்களுக்கு

பேன்கொட்டை-1, ரசகர்ப்பூரம்-½, ஏலரிசி-¼ எடைகளாக நிறுத்துவாங்கித் தேங்காயெண்ணெயி லரைத்துக் கலக்கி வெய்யிலில் வைத்தெடுத்துத் தடவிச் சீலைபோடவும்; ஈ: எறும்பு மொய்க்காது; வாசனை இருக்கும்.

## சொறி, சிரங்குக்கு

சுத்திசெய்த கெந்தகம் பலம் வீசம், ரசம் வீசம், நீரடி முத்து வீசம்பலம் இம்மூன்றும் ஊமத்தங்காயைக்கீறி உள்ளே வைத்து 6-வறட்டியில் புடம் வைத்தெடுத்து அந்தக் காயுடன் எருமைவெண்ணெய் வைத்தரைத்துக் காலையில் பழையது சாப்பிட்டபிறகு திரேகத்தில் பூசிக்கொண்டு 2-மணிக்கு இலுப்பைப் புண்ணாக்கைச் சுட்டு அரைத்துக் குளிக்கவும். 1-நாளையில் தீரும்.

## சகல படைகளுக்கும்

ரோஜனம் பலம்-1½, குழாகெந்தகம் பலம்-½, வெண்காரம் பலம்-¾ சீனகற்கண்டு பலம்-½ இவைகளை வெள்ளாட்டுப் பாலி

லரைத்து பில்லைதட்டி வைத்துக்கொள்ளவும். எவ்வித படைகளுக்கும் நல்ல ஜலத்திலிழைத்து தடவ உதிரும். பிறகு எண்ணெய் சாப்பிட்டால்தான் உள் வியாதிகள் ஆறும்.

## இரைப்பு, இருமலுக்கு

இஞ்சிச்சாறு, ஈரவெங்காயச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு இவை மூன்றும் சமனாகச்சேர்த்து 3-நாள் கொடுக்கத் தீரும்; இச்சா பத்தியம்.

## கோழை இருமலுக்கு

கோழை இருமலுடன் கபங்கட்டி யிருந்தால் 5-பலம் தேனைக் காய்ச்சிச் சுடுகையில்தானே மிளகுத்தூள் தோலா-1 பொரித்த வெண்காரம் தோலா-1 இதுகளை கலக்கி வேளைக்கு 1-தோலா வீதங் கொடுக்கத் தீரும்.

## புகை இருமலுக்கு

சுக்கு, திப்பிலி, மிளகு மூன்றும் சமனெடையா யெடுத்து மைபோலரைத்து மெல்லிய சீலையில் வஸ்திரகாயஞ்செய்து அந்த எடைக்கு வெள்ளைச் சர்க்கரையில் இரண்டாந்தரமாகிய பூரா சர்க்கரை சேர்த்துப் புட்டியில் வைத்துக்கொண்டு வேண்டியபோது திரிகடி பிரமாணம் எடுத்துப் பசும்நெய்யில் குழைத்துச் சாப்பிட 3-வேளையில் தீரும்.

## மார் கபத்திற்கு

நரிவெங்காயம் காலேவீச விராகனெடை, சுக்குத்தூள் 1-விராகனெடை, சப்பு 1-விராகனெடை, கபநாயகம் அரையே அரைக்கால் விராகனெடை இதைக் கற்கண்டுபாகில் சேர்த்தரைத்து 2-குன்றி எடை மாத்திரை செய்து 5-மாத்திரை வரையில் கொடுக்கலாம்.

## இருமலுக்கு வாயில் அடக்க மருந்து

அதிமதுரம், பொரித்த வெண்காரம், வெள்ளை மிளகு வகைக்கு தோலா-1 கல்வத்திலிட்டு கற்றாழைச் சோறுவிட்டரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வாயில் 2-மாத்திரை அடக்கி உமிழ்நீர் விழுங்கவும்.

## இரைப்பு வியாதிக்கு

ஊமத்தன்வேர் நிழலிலுலர்த்திப் புகைபிடிக்க மார்பின்னுரையை யறுக்கும்.

## இரத்தங் கட்டிய வீக்கத்திற்கு

வேப்பிலையை அரைத்துச் சட்டியில் கிளறிக்கட்டவும்.

## சிறுவர் வயிற்றுப்பூச்சிக்கு

பப்பளிக்காய் பால் விராகனெடை-1 முதல் 3-விராகனெடை வரையில் வெந்நீர் அல்லது பசும்பாலில் கொடுத்து 3-மணி நேரம் பொறுத்து ஆமணக்கெண்ணெய் ஒரு கரண்டி கொடுக்கவும்.

## குழந்தைகள் வயிற்றுப்பூச்சிவிழ

புரசம்விரையை அரைத்துப் பால், நெய், சர்க்கரை சேர்த்து லேகியமாய்க் கிளறிக் கழற்சிக்காய் வீதங் கொடுக்கவும்.

## பெரியவர்களுக்கு வயிற்றுப்பூச்சி விழ

நெல்லில் வேகித்தெடுத்த தேங்காயுடன் ஏலக்காயரிசி பலம்-1, தோல்நீங்கிய புரசம்விரை பலம்-1 இரண்டுங்கூட்டியரைத்துக் கழற்சிக்காய்ப் பிரமாணம் எடுத்துச் சர்க்கரையில் வைத்துச் சாப்பிடக் கிருமிகள் விழும்.

## இதுவுமது வயிற்றுகிருமி விழ

வாளப்பருப்பு, சாரைப்பருப்பு, கஸ்தூரிமஞ்சள், பாதம் பருப்பு வகைக்கு 1-பலங் கூட்டியரைத்து அதில்வரும் எண்ணெயைப் பிழிந்து 1-துளி அல்லது 2-துளிகள் கொஞ்சம் சர்க்கரையில்விட்டுக் கொடுக்கப் பேதியுடன் நாக்குப்பூச்சிகள் விழும்.

## காக்கை வலிக்கும் விக்கலுக்கும்

கர்ப்பூரம் குன்றி-1, பெருங்காயம் குன்றி-2, சாராயம் துளி-6 வேலன் கோந்து இளகில் அரைத்து 30-மாத்திரை செய்து நாளைக்கொருதரம் 3-மாத்திரை கொடுக்கவும்.

## வாய்வு, இடுப்பு வலிக்கு

கர்ப்பூரத்தைச் சாராயத்தில் அரைத்துத் தேய்க்கவும்.

**பதினோறவது கண்டா அவிழ்த்த பாகம் முற்றிற்று.**

---

☞ இனி பன்னிரண்டாம் பாகம் சுத்தி கட்டு முறைகள்.

உ

கடவுள் துணை

பதினெண் சித்தர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# வைத்திய திறவுகோல்

## (பன்னிரண்டாம் பாகம்)

### சுத்திகட்டு முறைகள்

விநாயகர் துதி

கலிவிருத்தம்

பத்தியாகபலபல மருந்திற்கும்
சுத்திபாகமும் சொல்லிடப்புவியினில்
அத்தனுர்சிவ னருளியபாலகன்
சித்திவிநாயகன் சேவடிபோற்றுவாம்.

நான்முக விருத்தம்

### ரசம் சுத்தி

சூதத்தைக்கொண்டுவந்து சூக்ஷுமமாய்அருகன்பாலில்
போதவேயொருநாள்வூறப் புகழ்செங்கத்தாள்கொட்டையோடு
தீதிலாசர்க்கரையோடு மிதுகளிலரைத்தெடுக்க
ஆதியாம்ரசத்தின்சுத்தி யாகிடுகண்டிடரே.

(இ-ள்.) சூதகத்தை அருக்கன் பாலில் ஒருநாள் ஊறி செங்கத்தாள் கொட்டை, சர்க்கரை இதுகளில் அரைத்தெடுக்கவும் சுத்தியாகும், எ-று.

### பூர சுத்தி

பூரத்தின்சுத்திதன்னைப் புகலவேயறிந்துகொள்வீர்
சீருளமிளகுவெற்றிலை சேர்த்ததில்கியாழமிட்டுக்
கோரியேமூன்றுநாளுங் கிழிகட்டியூறவைத்து
பாரதில்யெடுக்கச்சுத்தி பலித்திடும்பரீட்சைபாரே.

(இ - ள்.) பூரத்தை வெற்றிலை, மிளகு கியாழமிட்டு அதில் கிழிக்கட்டி மூன்றுநாள் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்; சுத்தியாகும், எ - று.

## கல்நார் சுத்தி

கல்நார்தன்னைவாங்கி கழுதைமூத்திரத்தில்சேரு
சொல்லியமூன்றுநாழி சுகமுடனூறவைத்து
வல்லவேகழுவிநீயும் வகையுடனெடுத்துக்கொள்ளு
பல்லுளோர்மகிழுஞ்சுத்தி பரீட்சைதான்பார்ப்பீர்தானே.

(இ - ள்.) கல்நாரைக் கழுதை மூத்திரத்தில் மூன்று நாழிகை ஊறினபின் கழுவி எடுத்துக் கொள்ளவும் சுத்தியாகும், எ - று.

## படிகாரம் சுத்தி

படிகாரம்கொண்டுவந்து பதமாய்க்கிழிதான்கட்டி
வடிவாகஎருமைச்சாணியில் வைத்ததையெடுத்துக்கொள்ளு
சிடனதுயில்லாவிட்டால் சிறுநீரில்மூன்றுநாளும்
திடமுடனூறவைத்து மருந்தினையெடுத்துக்கொள்ளு.

(இ - ள்.) எருமைச் சாணத்தில் கிழிகட்டி வைத்து எடுத்துக்கொள்ளவும். அல்லது சிறுநீரில் மூன்றுநாள் ஊற வைத்து எடுத்துக்கொள்ளவும், எ - று.

## லிங்க சுத்தி

லிங்கம் ஒரு கட்டியாக வாங்கி தேனில் ஒருநாள் ஊறி மூலைப்பாலில் ஒருநாள் ஊறி மறுநாள் எடுத்து எலுமிச்சம்பழ ரசம், குப்பைமேனிரசம், மூலைப்பாலும் சமமாய்க் கலந்துக் கொண்டு அடுப்பின்மேல் சட்டிவைத்து அதில் மேற்படி லிங்கத்தைவைத்து புகையாமல் சுருக்குக் கொடுக்கவும்; சுத்தியாகும். இதற்கு லிங்கக்கட்டு என்றும் பெயர்.

## வீர சுத்தி

வீரத்தை ஒரு இளநீரில் $1\frac{1}{4}$-விராகனெடை கற்பூரம் போட்டுக் கலக்கிச் சட்டியில் ஊற்றி அடுப்பிலேற்ற மேற்படி வீரத்தைத் துலாயந்திரமாகக் கட்டி எரித்து எடுத்துக் கொள்ளவும்.

## முதார்சிங்கு சுத்தி

முதார்சிங்கியை வெள்ளாட்டுக் கோமியத்தில் ஒருநாழிகை கொதிக்கவைத்து எடுத்துக் கொள்ளவும்.

## கெவுரி சுத்தி

வெள்ளிக்கெவுரியைக் கொண்டுவந்து பசும்பால் அல்லது சாணிப்பால், சுண்ணாம்புநீர், மிளகுக் கியாழம் இந்நான்கில் எதிலாவது துலாயந்திரமாகக்கட்டி எரித்தெடுத்துக் கொள்ளவும். பிறகு பன்றிப்பாலில் கிழிகட்டி அவித்து எடுத்துக் கொள்ளவும்; சுத்தியாச்சு.

## மனோசிலை சுத்தி

மனோசிலையைக் காடியில் கிழிகட்டி எடுத்துக் கொள்ளவும். வெள்ளாட்டு மூத்திரத்தில் துலாயந்திரங்கட்டி எரித்தெடுத்துக் கொள்ளச் சுத்தியாகும்.

## வங்க சுத்தி

வங்கத்தை இலுப்பெண்ணெயிலாகிலும் தேங்காய் எண்ணெயிலாகிலும் நவாச்சாரத் தூள்தூவி அதில் 1-தரம் உருக்கிச் சாய்க்கவும். அல்லது மோர்காடி, கோமியம், பழரசம் இதுகளில் உருக்கிச் சாய்க்கலாம்; இப்படியே நாகத்தையும் சுத்திசெய்து கொள்ளவும்.

## கருவங்க சுத்தி

கருவங்கத்தை வெள்ளாட்டு மூத்திரத்தில் பிரண்டைவேர் அரைத்துப்போட்டு நல்லெண்ணெய் விட்டுக் கலக்கிக்கொண்டு அதில் பத்துதரம் உருக்கிச் சாய்க்கவும்; சுத்தியாகும்.

## நாக சுத்தி

நாகத்தை ஆட்டுநெய் கொண்டுவந்து உருக்கிச் சிறுநீர், பழரசம் கூட்டிச் சாரம் கல்சுண்ணாமிட்டுக் கலக்கி வைத்துக் கொண்டு அதில் நாகத்தைப் பத்துதரம் உருக்கிச் சாய்க்கவும்; சுத்தியாகும்.

## சிலாசத்து சுத்தி

சிலாசத்தைப் பழரசத்தில் போட்டுக் கொதிப்பித்து எடுத்து எருக்கன் பாலில் மூன்று நாழிகை ஊறியபின் கழுவி

எடுத்துக்கொள்ளவும். அல்லது அல்லிப்பூ ரசத்தில் ஊறியும் எடுக்கலாம். ஆவின்பாலில் துலாயந்திரம் கட்டி எரித்தும் எடுத்துக்கொள்ளலாம்.

## கெருடப்பச்சை சுத்தி

கெருடப்பச்சையைப் பயறுபோல் செய்துக் கிழிகட்டிக் குமரிச் சாற்றில் 30-நாழிகை ஊறி யெடுத்துக் கொள்ளலாகும்.

## சீனம் சுத்தி

பசும்பாலில் மூன்று ஜாமம் ஊறி எடுத்துக் கொடுக்கவும்; சுத்தியாகும்.

## வெண்காரம் சுத்தி

வெண்காரம் பொரித்துக்கொள்ள வேணுமானல் காடியிலாவது பழரசத்திலாவது அரைத்துப் பில்லைதட்டி உலர்த்தி யெடுத்துக் கொள்ளவும்.

## முடிதாரம் சுத்தி

பனங்கள்ளு படி நாலில் கிழிக்கட்டி யெரித்து எடுத்துக் கொள்ளவும்.

## பால்துத்தம் சுத்தி

கிழிக்கட்டி சிறுவர்கள் மூத்திரத்தில் ஏழுநாள் ஊறிய பின் பசும் பாலில் இரண்டு ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

## துரிசி சுத்தி

தயிரினல் அரைத்து அடைதட்டி ஓடு காயவைத்து அதில் பிரட்டி எடுத்துக் கொள்ளவும். அல்லது தயிரில் ஒரு ஜாமம் ஊறி யெடுக்கவும்.

## மடல்துத்தம் சுத்தி

வெண்ணெய் அல்லது தயிர் கற்ருழைச் சாற்றில் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

## பச்சைத்துருசி சுத்தி

பசும் கோமியத்தில் எரித்துக் கழுவி உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

## பவழப்புத்து சுத்தி

பசும்மோரில் கிழிக்கட்டிவிட்டு நான்குநாழி யெரித்து எடுத்துக்கொள்ளவும்.

## அஞ்சனக்கல் சுத்தி

புளியாரை ரசத்தில் ஒருநாள் ஊறி யெடுத்துக்கொள்ளவும்.

## கல்மதம் சுத்தி

கல்மதத்தை சிறுநீரில் கழுவி யெடுத்துக் கொள்ளவும்.

## நாபி சுத்தி

பருத்தியிலை ரசத்திலூறி முத்திலைக்குள் வைத்து சுற்றிக் கும்பியில் சொருகி ஒருநாழி பொறுத்தெடுத்து நீரில் கியாழத்தில் துலாயந்திரங் கட்டி எரித்து பிறகு எருக்கன் பாலில் சற்று ஊறிக் கோமியத்தில் கழுவி யெடுத்துக் கொள்ளவும்.

## நேர்வாள சுத்தி

எருமைச் சாணத்தில் காடிவிட்டு கலந்து அதில் வாளத்தைப் போட்டுக் கொதிக்கவைத்து எடுத்து நஞ்சு நீக்கி அதாவது அந்தப் பருப்பைப் பிளந்து மூளைநீக்கிக் காடிமோர் பழரசம் கலந்து அதில் கொதிக்கவைத்து எடுத்துக் கொள்ளவும்.

## தாளக சுத்தி

தாளகத்தைச் சிறுதுண்டாகச் செய்து சிறுமொங்கைக் குடுவையிலிட்டு மேலே மூடும் ஓட்டில் மூன்றுதுவாரம் செய்து கரிநெருப்பின்மீது வைத்து விசிறுகையில் முதல் கறுப்புப் புகை வந்த பிறகு சிவப்பு புகை வருங் காலத்தில் எடுத்துக் கொள்ளவும்.

## தாளக சுத்தி

தாளகத்தைச் சுண்ணாம்புக்குள் வைத்துக் கழுதை மூத்திரம் விட்டு 7-தரம் தாளித்து எடுத்துச் சுன்னநீர் கொள்ளுக் கியாழம் தயிர் * பூசணிக்காய் நீர்காட்டி அகத்திக்கீரைவிரைத் தைலம் இவைகள் கூட்டி இரண்டுஜாமம் சுருக்குக் கொடுக்க

* பூசணிப்பழத்தை மேலேகீறி 3-விராகனெடை இந்துப்பு போட்டு அடியில் எழுத்தாணியால் துவாரம் செய்து மேலே தூக்கிக்கட்டி அடியில் பீங்கான் வைத்து இறங்கும் நீர் எடுத்துக் கொள்ளவும்.

வும். கரந்தைச் சாற்றில் இரண்டு ஜாமம் சுருக்குக் கொடுத்து எடுத்து சத்திச் சாரணைவேர், குக்கில், இதை முருங்கையிலை ரசத்திலரைத்துக் கவசம்செய்து லகுபுடமிட மிகுந்த சுத்தியாகும். பிறகு சகல அவிழ்தத்திற்கும் உபயோகப்படுத்தலாகும்.

### பாஷாண சுத்தி

64-பாஷாணங்கள் சுத்தி செய்யவேண்டில் குப்பைமேனி ரசம், கற்றாழம்பால், சிறுநீர், பழரசம், செம்பருத்தி, வெற்றிலை ரசம், வகைக்கு படி-1 அவைகளைப் பாண்டத்திலிட்டு அதில் பாறையுப்பு, வெடிகாரம், படிகாரம், நவாச்சாரம் வகைக்குப் பலம்-¼ தூள்செய்து கலந்து கிழிக்கட்டி இட்டு நிழலாக காற்றில்லா விடத்தில் 15-நாள் வைத்தெடுத்துக் காடியில் ஊற வைத்து எடுத்துக் கொள்ளவும்.

### 64-பாஷாணமும் ஏகசுத்தி

மேனிரசம், தக்காளிரசம், ஊமத்தன் ரசம், பழரசம், சிறுநீர், காடி சமஅளக கலந்து இதில் உப்பு, சுன்னம், வெடி... நவாச்சாரம் சீனம் வகைக்குப் பலம்-1 தூள் செய்து க... சரக்குகளைக் கிழியாய்க்கட்டி மண்டலமிட்டு எடுத்து உலர்... கொள்ளச் சுத்தியாகும்.

### இரும்பு சுத்தி

இரும்புப் பொடியை 1-நாள் பழரசத்தில் ஊறவை... தெடுத்து மறுநாள் எள்ளெண்ணெயில் ஊறவைத்தெடுத்து அயச்சட்டியில் போட்டு வறுத்துக் காடியில் கழுவி வேலம் பட்டைக் கியாழத்தில் கொதிப்பிட்டுத் திருப்பியுங் காடியில் கழுவி எடுத்துக் கொள்ளவும்.

### காந்த சுத்தி

காந்தத்தைப் பழரசத்திலும், காடியிலும், கொதிக்க வைத்தெடுத்துப் பிறகு சாணிநீரில் 7-த... காய்ச்சி, துவைக்கவும் சுத்தியாகும்.

### அயத்தோட்டி சுத்தி

பசும்பாலில் 4-ஜாமம் நெய், தேன் இவை ஊறி எடுத்துக்கொள்ளவும்.

### தோட்டி சுத்தி

முலைப்பால் வெள்ளாட்டுப் பாலிலும் தனித்தனி 10-நாழிகை ஊறவைத்தெடுத்துக் கொள்ளவும்.

### தோட்டிப் பாஷாணம்

துண்டு துண்டாய் நறுக்கிக் கிழிக்கட்டி நெல்லில் அவித்து எடுத்துக்கொள்ளவும்.

### பொன்னிமிளை

பொன்னிமிளையை 3-நாள் காடியில் ஊறியபின் கிருஷ்ணு அபிரேக்குத்தூள் 1-படி எடுத்து 3-படி கோமியத்தில் வேக வைத்து எடுத்து உலர்த்தி நெல்லு சேர்த்துக் கிழிக்கட்டி காடியில் தோய்த்து இறங்கும் தெளிவை நீக்கி உலர்த்திக் கொள்ளவும்.

### சகஸ்ரபேதி சுத்தி

நாரத்தங்காய் ரசத்தில் ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும்.

### செங்கோட்டை சுத்தி

ஜலத்தில் ஊறவைத்து மறுநாள் மூக்கை வெட்டி நீக்கி எடுத்துக் கொள்ளவும்.

### சிவதை சுத்தி

பசும்பாலில் அவித்து எடுத்து உணர்த்திக் கொள்ளவும்.

### அமுக்கிரா

ஆவின் பாலில் அவித்து எடுத்துக்கொள்ளவும்.

### சுக்கு சுத்தி

மேல்தோல்சீவி சுண்ணும்பு பூசி உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

### மிளகு சுத்தி

புளித்தமோரில் மூன்றுநாள் ஊறி வறுத்து எடுத்துக் கொள்ளவும்.

## திப்பிலி சுத்தி

திப்பிலியைப் பழரசத்தில் ஊறி எடுக்கவும்.

## ஓமம் சுத்தி

ஓமத்தைச் சுண்ணாம்பு தெளிவுநீரில் ஒருஜாமம் ஊற வைத்து உலர்த்தி எடுக்கவும்.

## இருசீரக சுத்தி

சீரகம், கருஞ்சீரகம் இதுகளைச் சுண்ணாம்பு நீரில் 7-ஜாமம் ஊறி உலர்த்தி எடுத்துக் கொள்ளவும்.

## ஊமத்தன்விரை சுத்தி

ஊமத்தன் விரையை 1-ஜாமம் ஜலத்தில் ஊறவைத்து எடுக்கவும்.

## எட்டிக்கொட்டை சுத்தி

எட்டிக்கொட்டையை நெல்லில் அவித்துச் சிறுகீரை ரசத்தில் 1-ஜாமம் ஊறியபின் தேற்றாங்கொட்டை ரசத்தில் வெவித்து எடுத்துக் கொள்ளவும்.

## கொம்பரக்கு சுத்தி

நல்ல ஜலத்தில்போட்டு அடுப்பில்வைத்து எரித்தெடுக்கவும். இப்படி 3-தரம் எரித்தெடுக்கவும்.

## மாசிக்காய் சுத்தி

பசும் நெய்யில் வறுத்து வெடித்தபிறகு எடுத்துக்கொள்ளவும்.

## எண்ணெய் சுத்தி

சகலவித எண்ணெய்களும் நல்ல ஜலத்தில்விட்டு 4-நாழிகை சென்று எடுத்துக் கொள்ளவும்.

## அமுக்குராம்வேர் சுத்தி

ஆவின்பாலில் கொஞ்சம் அவித்து எடுத்துக்கொள்ளவும்.

சுத்தியின் முறைகள் முற்றிற்று.

---

# கட்டுவகை முறைகள்

## பூரக் கட்டு

உன்னிதமாம்சீனவின் பூரந்தன்னை
ஒருபலமேவாங்கியதை மூலையின்பாலில்
தன்மையுடன்மூன்றுநா ளூறவைத்து
தானுலர்த்திச்சட்டிதனி லிதனையிட்டு
அன்னலனே துளசிரச மதிலேவூற்றி
அடுப்பேற்றிச்சிறுதணலா யதனைக்காய்ச்சி
நன்னயமாய்ரசஞ்சுண்ட யிறக்கிப்பாரு
நவிலுமொருபூரக்கட் டாகும்பாரே.

(இ - ள்) *சீனபூரம் 1-பலம் வாங்கி மூலைப்பாலில் 3-நாளூற வைத்தெடுத்து உலர்த்தி ஒரு சட்டியில் துளசி ரசம் பிழிந்து அதில் பூரத்தைவைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாக அந்த ரசஞ் சுண்டுகிற வரையிலும் எரித்தெடுத்தால் அது கட்டும் எ - று.*

## ரசகர்ப்பூரக் கட்டு

நாலுநல்லவிராகனெடை ரசகர்ப்பூரம்
நம்பியதைபெடுத்துநண்டு ரசத்தில்போட்டு
சாலவேரெண்டுஜாமம் சுறுக்கேகொடுக்க
சட்டமுடன்தானிறக்கிச் சொல்லக்கேளு
மேலவேமுசுமுசுக்கைச் சாறுதன்னில்
மைந்தனேரெண்டுஜாமம் சுறுக்கேகொடுக்கக்
கோலமுளரசமதுவுங் கட்டுமப்பா
குவலயத்தில்சூக்ஷமதை திறந்திட்டேனே.

(இ - ள்.) *4-விராகனுடைய ரசகர்ப்பூரத்திற்கு மூலைப் பாலில் நண்டை யிடித்துச் சாறுபிழிந்து 2-ஜாமம் சுறுக்கு கொடுத்து பிறகு முசுமுசுக்கைச் சாறுபிழிந்து 2-ஜாமம் சுறுக்கு கொடுக்கக் கட்டும், எ - று.*

## லிங்கக் கட்டு

*சீனலிங்கம் 1-பலம் வாங்கிச் சேராங்கொட்டை 15-பல மெடுத்துத் துண்டுதுண்டுகளாக வெட்டி ஒருசட்டியில் பாதி*

போட்டு அதின்மேல் லிங்கக்கட்டியை வைத்து மற்றப் பாதி கொட்டையைப் போட்டு லிங்கந் தெரியாமல்மூடி அடுப்பி லேற்றி எரிக்கும்போது விளக்கைக் காட்டினுல் திக்கென் றெரியும். அனல் அடங்கியபிறகு லிங்கக்கட்டியை எடுத்துக் கொண்டு பிள்ளைகளுக்குத் தேனில் உரைத்துக் கொடுக்கலாம். பத்தியம் புளிகூடாது. அந்த லிங்கக் கட்டியில் பாதி உடைத் துக் கல்வத்தில் பொடித்து வைத்துக் கொள்ளவும். இதற்கு லிங்க செந்தூரமென்று பெயராம். பலவித சுரங்களுக்கு அரிசிப் பிரமாணம் தேனிற் கொடுக்கலாம்.

## வன்னி கற்பமாகிய லிங்கக் கட்டு

1-பலம் லிங்கத்தைத் தேன், முலைப்பாலில் 3-நாள் ஊற வைத்தெடுத்து 1-பலம் நெல்லிக்காய் கெந்தகத்தை ஆலம் பால்விட்டு நன்ருய்க் கலக்க இடித்து லிங்கத்திற்குக் கவசஞ் செய்து உலர்த்திச் சிறுகுழியில்வைத்து அதன்மீது மணல் பரப்பி மறைத்துச் சூடுபடும்படியாக 2-வறட்டியால் புடம் போடவும். ஆறினபிறகு எடுத்து மேல்கவசமிட்ட கெந்த கத்தைநீக்கி வேறே கெந்தகம் 1-பலம் கொண்டுவந்து முன் மாதிரியாய் பாலிலிடித்துக் கவசித்து குழியில் வைத்து மணல் பரப்பி ஒரு வறட்டி அதிகப்படுத்தி புடம்போடவும். இப்ப டியே ஒவ்வொரு தடவையும் புதுகெந்தகங் கவசித்து ஒவ் வொரு வறட்டி அதிகப்படுத்தி 9-தடவை புடம்போட்டெடுத்து, முடிவில் முன் மாதிரியாகக் கவசஞ்செய்து 4-சீலைமண்செய்து பூமியில் 10-வறட்டியில் புடம்போட்டு எடுத்துச் சகல வாய்விற் கும் சீதளம், சுரம் ஜன்னி இவைகளுக்கு தேன், இஞ்சிரசத் தில் இழைத்துக் கொடுக்கவும்.

## வீரக் கட்டு

வேண்டியமட்டும் வீரத்தைக் கொண்டுவந்து சாம்பிராணி விராகனெடை-1, நெல்லிக்காய் கெந்தகம் விராகனெடை-1 இரண்டும் தூள்செய்து கரண்டியிலிட்டு அனல்பிடிக்க உருகி வருஞ் சமயத்தில் வீரத்தைப்போட்டுப் புரட்டி எடுத்துக் கொள்ளவும், ஜன்னி, வாய்வுகளைக் கேட்கும். இதுபோல் லிங்கத்தையுங் கட்டிக்கொள்ளலாம்.

## வேறுவகை லிங்கக் கட்டு

ஜாதிலிங்கம் 5-விராகனெடை கொண்டுவந்து மூலைப்பாலில் 1-ஜாமம் சுறுக்குக்கொடுத்து, எலுமிச்சம்பழரசத்தில் 1-ஜாமம் சுறுக்குக்கொடுத்து, மணித்தக்காளி சாற்றில் 1-ஜாமம் சுறுக்குக்கொடுத்து எடுத்துப்பார்க்கக் கட்டும். ஜன்னி, சுரம், தலைவலி இதுகளுக்கு மூலைப்பாலில் உரைத்துக் கொடுக்கலாம். சீதளஜலுப்பு இதுகளுக்குத் தேனில் உரைத்துக் கொடுக்கவும். பத்தியம்: அரைப்புளி இச்சாபத்தியம்.

## வேறுவித வீரக் கட்டு

துருசு விராகனெடை-1½, படிகாரம் விராகனெடை-1½ இரண்டையும் தூள்செய்து அடுப்பில் ஓடு காயவைத்து ஷை தூளை 3-பங்காக்கி 1-பங்கை ஓட்டில்தூவி எரிகிறசமயத்தில் 1-விராகனெடை வீரத்தைப்போட்டுப் புரட்டி எடுத்துக்கொள்ளவும். ஓட்டிலுள்ள சுண்டுகளைச் சுரண்டி எடுத்துவிட்டு மற்ற 2-பங்கு தூளையும் இப்படியே செய்தெடுத்து மறுபடியும் விராகனெடை சூடத்தைக்கொண்டுவந்து கவசித்துகொளுத்தி விட்டால் வீரம் உருகி மணியாகும். க்ஷயம், ஜன்னி இதுகளுக்காகும்.

**பதினெண்சித்தர்கள் வைத்திய திறவுகோல்**

பன்னிரண்டு பாகமும் முற்றுப்பெற்றது.

---

திருமகள் விலாச அச்சு நிலையம், சென்னை-1 1953.